இதழ் எண் - 21, 22

ஏப்ரல் - செப்டம்பர் 2014

இரு காலாண்டுகள் இணைந்த இதழ்

# அருவி

கவிதை இலக்கியக் காலாண்டிதழ்

- முற்றத்தில்
உதிர்ந்த நிழலை
கொஞ்சம்
சேர்த்துவைத்திருக்கிறது
அந்தி
சுவற்றோரமாய்...

முழுதாய் உதிர்ந்த
மஞ்சள் வெய்யிலை
அள்ளி
எடுப்பதற்குள் அதை
பறித்துக்கொண்டது
இருள்.

என்
தோள்சாய்ந்து
காத்திருந்த
வார்த்தைகளை
கீழிறக்கி விட்டேன்
மெல்ல.

சிந்தாமல்
எடுத்துச்செல்ல
முடியவில்லை
என்னால்
ஒரு
துளிக்கவிதையை
கோப்பையில்
நிரப்பி.

- காவனூர் ந. சீனிவாசன்

அருவி கவிதை இலக்கியக் காலாண்டிதழ் இதழ் - 20, 21

ஆசிரியர் :
காவனூர். ந. சீனிவாசன்
கைபேசி : 9600898806
aruvisrinivasan@gmail.com

உதவி ஆசிரியர் :
நா. புவனேஸ்வரி

அனைத்து தொடர்புக்கு:

அருவி
14, நேரு பஜார்,
திமிரி - 632 512.
ஆற்காடு வட்டம்,
வேலூர் மாவட்டம்.

சந்தா விவரம்
தனி இதழ் : ரூ. 25/-
ஆண்டு சந்தா : ரூ. 100/-

அடுத்த இதழ்:

அக்டோபர்-நவ-டிசம்பர் - 2014
**'ஆண்டு மலர்'**
அனைத்து வடிவக் கவிதைகளுடன்.
படைப்புகள் வந்துசேர
இறுதி நாள் : 30.9.2014

# அருவி

தொடர்ந்து உங்கள் ஆதரவினை
நல்கிட வேண்டுகிறோம்.

★ **பண்ணுருட்டி செந்தமிழ்ச்சங்கம்** நடத்திய **2ஆம் ஆண்டுவிழாவில் 'செந்தமிழ் சிற்றிதழ் செம்மல்'** விருது 'அருவி'க்கு கிடைத்திருக்கிறது. உரிய உயர் பெருமைகளனைத்தும் அருவிக்கவிஞர்களையே சாரும்.

## நன்றி

**வண்ணதாசன்**
**பிறைமதி**
ஆலந்தூர். **கோ.மோகனரங்கன்**
முனைவர். **எ.மு.ராஜன்**
**அமுதபாரதி**
**துறவி**
**அனலேந்தி**
குகை. **மா.புகழேந்தி**
**சௌந்திரா மகாதேவன்**
**பாரதிவசந்தன்**

அனைத்துக் கவிஞர்கள்
கல்லூரிப் பேராசிரியர்கள்
முனைவர்கள்
தமிழ் அறிஞர்கள்
தமிழ் இலக்கிய அமைப்புகள்
தோழமை இதழ்கள்
அனைத்துச் சிற்றிதழ் ஆசிரியர்கள்
குறுஞ்செய்தி இதழ்கள்
ஆண்டு உறுப்பினர்கள்
முகநூல் நண்பர்கள்
மற்றும் வாசகர்கள்

## அருவிக்கரையில்...

இனிய வாசகர்களுக்கு,

புரட்டிப்போடும் வாழ்வியல் நெருக்கடிகளை, யாரும் எளிதாய் கடந்துவிட முடிவதில்லை. சிலர் நீந்துகின்றனர்; சிலர் கரைந்துபோகின்றனர்; மிகச்சிலரே கரையேறுகின்றனர்.

பாரம்பரியம், கலாச்சாரம், சடங்குகள், சம்பிரதாயங்கள் என்பவைகளை புறந்தள்ளி, அகவயமாய் ஒரு தேடலும், புறவயமாய் தேடல்களும் விரவிக்கிடக்கிறது எல்லோர் மனங்களிலும். நுணுகி நுணுகிப் பார்த்தால் சேர்த்து வைத்த கனவுகளை வழியில் தவறவிட்டவர்களும்; ஒரு கணத்தில் வாழ்க்கையை தெரிந்தும்; தெரியாமலும் தொலைத்தவர்களும், துயர்களைத் தேடி தேக்கிக் கொண்டவர்களும்; தூக்கிச் சுமக்க முடியாத எண்ணற்ற பாரங்களை இறக்கி வைக்க முடியாமல் புலம்பிக் கொண்டிருப்பவர்களும்தான் அதிகம்.

மனிதமனம் அலைப்புறும் போது வாழ்வியல் கசப்புகளையும், போராட்டங்களையும், சிலிர்ப்புகளையும் தன் விரல் நுனிக்கு கொண்டுவந்து வார்த்தைகளில் நீட்சி பெறச்செய்து மனதை மயிலிறகாய் கவிதைகளில் வருடிப்போவது கவிஞனின் மனம் மட்டும்தான்.

கவிதை என்பது தனக்குள் கணக்கில் அடங்காத கூறுகளை மூளை மடிப்புப்போலச் சுருட்டி வைத்துக்கொண்டுள்ளது.

எண்ணற்ற மௌனங்களையும், இடைவெளிகளையும், புதிர்களையும், தொனிகளையும் யூகங்களையும் தனக்குள் குடியிருக்க அனுமதித்துத் துல்லியமாக தன்னைக் கட்டமைத்துக் கொண்டு உணர்ச்சிகளின் வெளியீட்டுத்தளத்தில் ஜீவத்துடிப்புள்ளதாக, தன்னை சிருஷ்டித்துக்கொண்டு தனக்குள் கவிஞனையும், கவிஞனுக்குள் தானுமாக மாறி மாறி ஒரு சுழற்சியாக இயங்கியும், இயக்கியும் ஒரு நிதர்சனத்தை தன் இருப்பில் தக்கவைத்துக்கொள்கிறது.

கவிதைமொழி தனித்துவம் வாய்ந்தது. மொழியின் உச்சபட்ச வீச்சு கவிதையாக மட்டுமே இருக்க இயலும். கவிதை குறித்து ஏராளமான எதிர்மறை விமர்சனங்களும், விவாதங்களும் தொடர்ந்து நிகழ்ந்தபடிதான் இருக்கிறது.

அகலமும், ஆழமும் கூடிய வார்த்தைகள் மிகவும் நுட்பமாக அலசி ஆராய்ந்து எடுத்தெழுதி, உட்புகுத்துதலில், பிரவேசிக்கிற மனம் லயித்துப்போய் மீள எழாமல் கவிதைக்குள்ளேயே மூழ்கிக்கிடத்தலென்பது தவிர்க்க முடியாதொன்றாகிவிடுகிறது எல்லோருக்கும்.

ஒவ்வொரு கவிதையிலும் இயக்கம் உண்டு. உணர்ச்சியின் மூலம் தான் கவிதையில் உருவம் அமைகிறது. மொழிக்கூறுகளின் அடிப்படையில் கட்டப்படும் இலக்கியம் தனக்கென்று சுதந்திரமான அமைப்பைக்கொள்கிறது.

வால்ட் விட்மனின் கவிதைகள் ஏற்படுத்திய தாக்கம் தான் பழையவேத உபநிடதங்களில் ஈடுபாடும் புதிய சிந்தனைப்போக்கும் கொண்ட பாரதியாருக்கு காட்சிக்கவிதை படைக்க உறுதுணையாயிருந்திருக்கிறது.

தற்காலிகக் கவிதைக்குரியபாடு பொருள்கள் அனைத்திற்கும் நிலைக்களமாக அமைவது சமுதாய உணர்வும், மனிதநேய உணர்வுமே ஆகும்.

சமூக மதிப்பீடுகளுக்காக சுயத்தை இழந்தும், தொலைத்தும் கிடக்கும் இச்சிக்கலான வாழ்முறை பலங்களையும், பலவீனங்களையும் முன்வைத்து சிந்திக்க வைக்கும் கவிஞனை அடையாளப்படுத்தி தனித்து காட்டுகிற கவிதை. மனநெகிழ்ச்சியை, மன அசைவை அடிப்படையாகக் கொண்டு துல்லியமான நகர்வுகளை நகர்த்தும் சக்தி வாய்ந்தவொன்று.

ஆழ்ந்த சிந்தனையும், நுட்பமான கற்பனைத் திறமும் இணைந்து அமையப்பெறும் படிமத்தினாலேயே கவிதைக்கு சிறப்பு கிடைக்கிறது.

எழுதுபவனின் மனதீட்சண்யம்; புத்துணர்வு தூண்டுதல் இணைந்து தருகிற சொற்பிரயோகம், நுட்பமான வர்ணனை, நுட்பமான பரிமாணத்திலும் வேகம் குறையாத வார்த்தைகள், சூட்சுமமான பொருள் பொதிவு என ஆழமான கூர்மையுடன் யதார்த்தத்தையும் தாங்கி சலனமற்றுச் செல்கிறது கவிதைக்குள் அவரவர் மௌனநதிகள் அலைகளை எழுப்பியவாறு.

கவிதையின் உணர்ச்சியை பிய்த்துக்காட்டி விமர்சிக்க இயலாதெனினும் ஒரு மகோன்னத நிலையை, கவித்துவ உணர்ச்சியை களங்கமற்று நிறைத்துச் செல்கின்றன ஒவ்வொரு கவிஞனின் ஆத்மார்த்தமான உணர்வுகளும்.

கவிதைகளின் உள்ளீடுகளில் அதன்பரப்பு முழுவதும் நிரம்பி வழிகிறது கவிஞர்களின் எல்லையற்ற அனுபவத்துடிப்புகள்.

சிந்தனை நெருப்பைத் தூசிதட்டிவிட்டு கொஞ்சம் வாசிக்க கையிலெடுங்கள். ரசிக்கும் கணங்களைவிட ஆழமூழ்கி திளைக்கும் கணங்கள் உன்னதமானவை என வாசகர்கள் இதில் உணரும் தருணங்களுக்காக காத்திருக்கிறேன்.

● சொல்லாமலிருக்க
முடியவில்லை;
ஒவ்வொரு முறையும்
கவிதைபற்றி.

சிறு
கவிதையென்றாலும்
அதன் வாசல் திறந்து
உள்நுழைந்து
பிரவேசித்து வருவது
வழக்கமாகிப்
போகிறதெனக்கு.

மூச்சுமுட்டும்
நேரங்களிலெல்லாம்
வார்த்தைக்குள் வந்து
உட்கார்ந்து
இளைப்பாறிக் கொள்கிற
இந்தக் கணங்கள்
அற்புதமானவை;
அரூபமானவையென
எழுதத் தோன்றுகிறது.

நினைவுகளைக்
கோர்த்து கோர்த்து
கவிதையின் முற்றத்தில்
தோரணங்களாக்கி
கட்டுவதில்
ஒரு அலாதிப் பிரியம்தான்
ஞாபகங்களுக்கு.

விட்டு
விலகமுடியவில்லை
எழுதி முடிப்பதற்குள்
என்னால்
எண்ணி முடிக்க முடியவில்லை
எனக்குள்
இத்தனை பௌர்ணமி நிலவுகளா?

அடுத்த இதழில்
சந்திப்போம்.

கைபேசி : 9600898806
aruvisrinivasan@gmail.com

ஆசிரியர்.
காவனூர். ந.சீனிவாசன்

இந்த இதழில் கவிஞர்கள்

| | |
|---|---|
| காவனூர். **ந.சீனிவாசன்** | - 96008 98806 |
| பாவலர். **இராம.இளங்கோவன்**, பெங்களூர். | - +919845526064 |
| ஆலந்தூர். **கோ.மோகனரங்கன்.** | - 93804 17307 |
| பாவலர். **துரைமூர்த்தி**, ஆற்காடு. | - 94434 90117 |
| **கே.பி.பத்மநாபன்**, கோவை-5. | - |
| பெருமாங்குப்பம். **சா.சம்பத்து** | - 94429 53236 |
| **ஜெம்சித் ஸமான்**, இலங்கை. | Tel : - 75267487, 758015868 |
| **அல்அமீனுல் தஸ்னீன்**, மணவாளக்குறிச்சி. | - 99444 77741 |
| **தாய்.சுரேஷ்**, கடத்தூர். | - 97871 64305 |
| **தேனரசன்**, பொள்ளாச்சி-2. | - 99444 56140 |
| **பாரதிவசந்தன்**, புதுச்சேரி. | - 94443 38608 |
| **துறவி**, கொடுங்கையூர், சென்னை-118. | - 98402 61229 |
| சென்னிமலை. **தண்டபாணி.** | - 94435 63649 |
| பேராசிரியர். **இரா.சோதிவாணன்**, சென்னை. | - 91766 56510 |
| **கலைச்செல்வி**, திருச்சி-21. | - 94433 65575 |
| **விக்ரமாதித்யன்நம்பி**, தென்காசி. | - |
| **க்ருஷாங்கினி** | - 4422231879 |
| **வளவ.துரையன்**, கடலூர். | - 93676 31228 |
| **ப.மதியழகன்**, மன்னார்குடி. | - 95973 32952 |
| **கா.அமீர்ஜான்**, திருநின்றவூர். | - 98409 54846 |
| **ரிஷபன்**, ஸ்ரீரங்கம். | - 94425 02781 |
| **யாழி**, கோவை. | - 99763 50636 |
| **அருணா சுந்தரராசன்**, மானாமதுரை. | - 98429 68176 |
| **அனலேந்தி.** | - 82201 35432 |
| **கோ.மகேசன்**, மாத்தூர், சென்னை-68. | - 91769 61919 |
| **சுப்ரா**, திருநெல்வேலி-11. | - 94423 28085 |
| கன்னிக்கோவில். **இராசா.** | - 98412 36965 |
| **வசந்ததீபன்**, பெரியகுளம். | - 88836 37375 |
| **சுவாமி.இராமானுஜம்**, பெங்களூர்-29. | - 081-23456243 |
| வண்ணை. **சிவா**, சென்னை-44. | - 99404 07930 |
| **ஜி.சீனிவாசகோபாலன்**, காஞ்சிபுரம். | - 94453 35513 |
| முனைவென்றி. **நா.சுரேஷ்குமார்**, பரமக்குடி, இராமநாதபுரம். | - 87549 62106 |
| **மன்சூர்அலி**, சவுதிஅரேபியா, ரியாத். | - 00966-509150390 |
| பேராசிரியர். **வெ.சாக்கன்**, இராணிப்பேட்டை. | - 97895 89323 |
| **சௌந்திரமகாதேவன்**, திருநெல்வேலி. | - 99521 40275 |
| **நீலநிலா செண்பகராஜன்.** | - 94880 01251 |
| **பிறைமதி**, சென்னை-77. | - 98435 14251 |
| **கா.ந.கல்யாணசுந்தரம்**, செய்யாறு. | - 94432 59288 |
| **ச.கோபிநாத்**, சேலம். | - 97902 31240 |

| | |
|---|---|
| **குறிஞ்சிமைந்தன்**, புதுதில்லி. | - 89400 83259 |
| **சா.இரா.மணி**, வந்தவாசி. | - 98651 84674 |
| ஸ்ரீரங்கராஜபுரம். **துளசி.** | - 87549 21751 |
| **அ.பிரமநாதன்**, காசாங்காடு. | - 95854 49055 |
| **கருமலைபழம்நீ**, வியாசார்பாடி, சென்னை. | - 94444 50295 |
| **சு.சத்யவீணா**, ஆர்.ரெட்டியபட்டி, விருதுநகர். | - 96556 91151 |
| **கா.இளையராஜா**, சாத்துக்கூடல். | - 84899 71761 |
| **வாலிதாசன்**, முகவை-15. | - 98948 87705 |
| **வே.ம.தமிழரசு**, நாமக்கல். | - 94885 74759 |
| **ரத்னம் ஜெயகுமார்**, திமிரி. | - 98946 25766 |
| **சக்தி**, திருத்துறைப்பூண்டி. | - 90929 25789 |
| **வீ.உதயக்குமார்**, வீரன்வயல். | - 99628 61594 |
| **பாரியன்பன்**, குடியாத்தம். | - 94431 39353 |
| **வ.பி.எட்வின்**, திருநின்றவூர். | - 97106 01986 |
| **வீ.சிவசங்கர்**, கள்ளக்குறிச்சி. | - 96591 57290 |
| **க.ராமஜெயம்**, சத்துவாச்சாரி. | - 94874 54793 |
| **அ.ஜெயக்குமார்**, இடைப்பாடி, சேலம். | - 95787 7757 |
| **கு.ராம்குமார்**, வாடாமங்கலம். | - 99658 19583 |
| **வசந்தராஜா**, நெய்வேலி. | - 94865 79791 |
| **துரை.நந்தகுமார்**, மாத்தூர். | - 94449 01356 |
| **சொ.சரவணபவா**, திமிரி. | - 95667 00550 |
| **கூ.ரா.அம்மாசையப்பன்**, சேலம்-30. | - 86081 19295 |
| ஆரூர். **செ.கர்ணா.** | - 97502 58823 |
| **நீலமணி**, பெரம்பூர். | - 94432 80228 |
| **நாகினி**, துபாய். | - 99942 97296 |
| மதுரை. **க.சரவணன்.** | - 93441 24572 |
| அதங்கோடு. **அனிஷ்குமார்.** | - 94432 80228 |
| **சூர்யநிலா**, சேலம். | - 84381 28004 |
| **நீச்சல்காரன்**, சென்னை. | - 86750 08430 |
| **ஆர்.எம்.நுஸ்ரி**, இலங்கை. | - 94712 39141 |
| பேராசிரியர். **சி.பழனி.** | - 97898 25618 |
| **சந்திரமனோகரன்**, ஈரோடு. | - 94438 41122 |
| **மு.முருகேஷ்**, வந்தவாசி. | - 94443 97296 |
| குகை. **மா.புகழேந்தி** | - |
| முனைவர். **எ.மு.ராஜன்**, புதுச்சேரி. | - 09865553434 |
| **இரா.இராஜேஷ்குமார்**, தர்மத்தூரணி. | - 91594 51857 |
| **எஸ்.மைக்கேல் ஜீவநேசன்**, சென்னை-87. | - 91765 59703 |
| **இரா.பூபாலன்**, சூலக்கல், பொள்ளாச்சி. | - 98422 75662 |
| **மு.குமரன்**, பண்ணந்தூர். | - 97861 72423 |
| முனைவர். **மித்ரா**, சென்னை. | - 80560 67298 |

| | |
|---|---|
| **அமுதபாரதி** | - 98403 80063 |
| குடந்தை. **பாலு**, சென்னை. | - 80560 67298 |
| **கி.சார்லஸ்**, நாகப்பட்டிணம். | - 90478 41983 |
| பட்டியூர். **செந்தில்குமார்**, துபாய். | - 00971554216786 |
| **வீ.தங்கராஜ்**, காஞ்சிபுரம். | - 98948 09812 |
| பேராசிரியர். **க.சங்கர்**, அரியலூர். | - 90476 15294 |
| **இரா.இரவி**, மதுரை. | - 98421 93103 |
| **வைகறை**, பெரும்பாலை. | - 96884 17714 |
| **சந்திராபெருமாள்**, கும்பகோணம். | - 97913 56631 |
| **ஆரிசன்**, கீழ்க்கொடுங்காலூர். | - 94423 11118 |
| **அருணாச்சலசிவா**, சென்னை-41. | - 81241 77898 |
| **செண்பகஜெகதீசன்**, நாகர்கோயில். | - 94439 80220 |
| **மு.ஆறுமுகம்**, மலேஷியா. | - +60164709451 |
| **மா.கார்த்திகேயன்**, கழுகுமலை. | - 78455 72116 |
| **உமையவன்**, திருவான்மியூர், சென்னை-41. | - 90254 59174 |
| **ச.கோபிநாத்**, சேலம். | - 97902 31240 |
| **கு.ராம்குமார்**, வாடாமங்கலம். | - 99658 19583 |
| **புதுயுகா**, பண்ணந்தூர், கிருஷ்ணகிரி. | - 95665 80012 |
| **ஆ.ச.மாரியப்பன்**, புதுக்கோட்டை-1. | - 97500 15150 |
| **ப.கஜேந்திரன்**. சென்னை-88. | - 98943 09067 |
| **மு.ஜெயலட்சுமி**, குரோம்பேட்டை | - 98409 36364 |
| **ம.ரமேஷ்**, முத்துக்குமரன்மலை. | - 98652 24292 |
| **அரவிந்தன்**, பாலக்கரை. | - 94426 63637 |
| **மு.கோபி சரபோஜி**, இராமநாதபுரம். | - 90471 47455 |
| **ஹிஷாலி**, வேளச்சேரி, சென்னை. | - 99940 23810 |
| **சு.கேசவன்**, தொண்டையூர். | - 99438 74595 |
| **புதுவைத்தமிழ்நெஞ்சன்** | - 94421 88915 |
| ஓமலூர். **பாலு** | - 90430 57626 |
| **வெற்றிப்பேரொளி**, திருக்குவளை. | - 94422 75418 |
| **தனலெட்சுமி பாஸ்கரன்**, திருச்சி. | - 99658 95540 |
| **இரா.தயாளன்**, திருவாய்நல்லூர். | - 97157 82142 |
| **வலங்கைமான் நூர்தீன்**, திருவாரூர். | - 97900 94477 |
| **என்.பூபாலன்**, திருவாய்நல்லூர். | - 95786 09622 |
| திருச்சி. **அ.கௌதமன்**, மடிப்பாக்கம், சென்னை. | - 88707 48997 |
| **ஆர்.கம்பம்.ரவி** | - 99426 16296 |
| **கண்ணன்சேகர்**, திமிரி. | - 96988 90108 |
| **ந.க.துறைவன்**, சத்துவாச்சாரி. | - 94422 34822 |
| **அமரன்** | - 96320 99855 |
| **ஜா.ப்ராங்ளின்குமார்**, மதுரை. | - 90033 90518 |
| **ஏ.எம்.முபாரக்**, ஜி.கல்லுப்பட்டி. | - 99525 61499 |

பாவலர். **இராமஇளங்கோவன்,**
**பெங்களூர்.**

பாற்கடலை தேவர்கள் கடைந்தெ டுத்தப்
பாலமுதம் இனிக்காமல் கசக்கக் கண்டேன்;
தோற்றமிலா குளிர்தென்றல் அமுத மென்னை
தீண்டியுடல் குளிர்வித்தும் இன்பம் காணேன்;
கூற்றுவனால் குடைசாயா உடலினுள்ளே
குடியிருக்கும் உயிரமுதம் இனிக்கக் காணேன்;
மாற்றமிலா மாத்தமிழே அமுதமென்பேன்;
மற்றெதிலும் திகட்டாத அமுதம் காணேன்.

ஆலந்தூர். **கோ.மோகனரங்கன்.**

- தலை உள்ளோர் தமிழ்கற்றால்
  சாலையிலே அவர் நடக்கும்
  தரைமண் ஆவேன்.

தலை உள்ளோர் இல்லத்தில்
தமிழ்வாழ்ந்தால் கோயிலென்று
தாழ்ந்து நிற்பேன்.

தலை உள்ளோர் வாய்ச்சொற்கள்
தமிழானால் அவரே என்
தலைவர் என்பேன்.

தலை உள்ளோர் அனைவருமே
தமிழ்அருமை அறியுமட்டும்
தளரமாட்டேன்.

எச்செயலும் தமிழ்வழியில்
ஏற்பதுவே தமிழ்நாட்டில்
ஏற்றம் நல்கும்.

எச்சொல்லும் தமிழ்ச்சொல்லாய்
இருப்பதுதான் தாய்த்தமிழின்
இனிமை காக்கும்.

எப்படியோ போகட்டும்
என்றிருந்தால் தெருமண்ணாய்
இளைத்துப் போவோம்.

அப்படி ஓர் இழிநிலையை
அடையாமல் காப்பதற்கே
அணிவகுப்போம்.

பாவலர். **துரைமூர்த்தி,**
ஆற்காடு.

- தமிழேஎன் செல்வமெனத் தாங்கித் தழைத்தேன்
அமிழேன்; அயரேன்; அலையேன் - உமிழ்கடலாய்
அல்லல்பல் லாயிரமாய் ஆழ்ந்தே வதைப்பினும்
நல்லதமிழ் காக்கும் நலம்.

மொழியது தாழ்ந்தால் மொழிவாழ்ந் திடுமா?
அழியும் இனமே அறிவாய் - விழிப்பாய்
தமிழா தமிழைத் தகவுடன் காப்பாய்
தமிழ்ப்போல் தழைப்பாய்த் தனித்து.

கனியிருப்பக் காயேன்? கனிவில் கனவேன்?
நுனிநாக்கில் தீஞ்சொல் நோற்பேன்? - இனியேனும்
நன்றாம் நறுந்தமிழ் நல்கிடும் சொற்களாய்
என்றுமே இன்சொல் இயம்பு.

தமிழே உயிராய்; தமிழே உறவாய்;
தமிழே மறமாயத் தழைத்தேன் - அமிழ்தினிய
யாழிசையாம் என்தமிழ்க்கு யாரெதிரி யானாலும்
ஆழிக்குள் போட்டே அழி.

**கே.பி.பத்மநாபன்,** கோவை-5.

● புலனைந்தும் அடக்கியதாய்ப் பொய்யு ரைத்துப்
 பொருள்சேர்க்கும் பொய்மையும் யோக மாமோ?
சலனங்கள் இல்லாத சாமி யென்று
 சரசங்கள் செய்வதுவும் யோக மாமோ?
நலம்செய்யும் தியானத்தின் வகுப்பெ டுத்து
 நாரிகளை அணைப்பதுவும் யோக மாமோ?
வலமிங்கே வருகின்ற யோ(க்)கி யர்கள்
 வணக்கத்திற் குரியவரோ? சற்றே யோசி!

கண்மூடி இருந்திட்டால் தியானம் அன்று;
 கரம்கட்டி அமர்ந்திட்டால் தியானம் அன்று;
உண்பதையே சுருக்குவதும் தியானம் அன்று;
 உடைகாவி யாகுவதும் தியானம் அன்று;
தண்ணீர்மேல் நடப்பதுவும் தியானம் அன்று;
 தரைமீது படுப்பதுவும் தியானம் அன்று;
பண்ணிசைத்த பசனையும் தியானம் அன்று;
 பரவசமாய் நடிப்பதுவும் தியானம் அன்று;

உச்சிவெயில் தனிலுழைக்கும் உழவன் யோகி;
 உழைப்பாளி வியர்வைதான் தியான மார்க்கம்;
எச்சிலிலைக் கிடைத்தவுடன் நாய்க்கும் ஈந்து
 இன்புறும்பிச் சைக்காரன் அன்றோ யோகி?
மிச்சமின்றிச் செல்வத்தை வழங்கி விட்டு
 மெய் நோவப் பிறர்க்குதவும் மனிதன் யோகி,
இச்சகத்தை மனிதத்தால் அணைத்து நேய
 இன்பத்தின் சுவையறிதல் தியான யோகம்!

பெருமாங்குப்பம். **சா.சம்பத்து.**

● தமிழ்ச்சுவையால் தமிழ்க்கலையால் மகிழும் வண்ணம்
தகவமைத்துக் கொள்கின்ற எண்ணம் இன்றித்
தமிழினத்தார் பிறமொழிமேல் பற்று வைத்தே
தடம்புரண்டால் தமிழ்மொழியின் நிலையென் ஆகும்?
தமிழொன்றே ஞாலத்தில் உயர்ந்த தென்றும்
தென்புலத்துத் தமிழ்மரபே சிறந்த தென்றும்
குமுகாயம் மகிழ்ந்துணரச் செய்தோம் ஆயின்
கனித்தமிழால் தனியெழிலை ஞாலம் காணும்...!

■ கவிதை ஒருகலை. கவிதையைவிட நுட்பமான மொழிசார்ந்த வெளிப்பாடு. வேறொன்று கிடையாது. சிக்கனமான சொல்லமைப்பு கொண்ட கவிதை நூற்றுக்கணக்கான பக்கங்களில் கூறிவிட முடியாதவற்றை, காண்பிக்க முடியாதவற்றை, ரத்தினச் சுருக்கமாக வெளியீடு செய்துவிடுகிறது.

- ரா.ஸ்ரீனிவாசன்.

■ ஒருகவிதை உங்களை ஏதாவது செய்ய வேண்டும். சந்தோசப்படுத்தவேண்டும் அல்லது கலவரப்படுத்த வேண்டும். குறைந்தபட்சம் வாழ்வைப்பற்றி யோசிக்க வைக்கவாவது வேண்டும்.

- விக்ரமாதித்யன்.

■ தனக்குத்தானே பேசிக்கொள்ளும் மனோநிலையிலிருந்து கவிதை எழுத்தாக்கப்படுகிறது. தனக்குத்தானே முரண்பட்டும் உடன்பட்டும், பல வரையறைகளையும் சாத்யங்களையும் உருவாக்கிக் கொண்டும், இவற்றையெல்லாம் மறுதலித்தும் இயங்கும் இலக்கிய வடிவமாக அறியப்படுகிறது. கவிதைமொழி உணர்வுச் சிக்கல்களையும், உறவுச் சிக்கல்களை அதிகமாக பேசும் வடிவமாக கைக்கொள்ளப்பட்டாலும், மொழியின் எல்லைகளை தகர்த்தும் அர்த்தங்களின் விளக்கங்களை மறுதலித்தும் தனக்கான மொழியையும், மர்மங்களையும் ரகசியங்களையும் கனவுகளையும் பெருக்கிக்கொள்கிறது.

- மாலதி மைத்ரி.

## ஜெம்சித் ஸமான்
**கவிதைகள்**

● நேற்றைய பின்னந்தி வானத்தை
பந்துருண்டைபோல
விரல்களுக்குள்
பொத்திக் கொண்டுவந்து
இழுப்பறைக்குள் ஒளித்துவைத்தேன்.
இதோ
இப்போதுகூடத் திறந்து பார்த்தேன்.
நேற்றைய பின்னந்தி வானம்
என்
இழுப்பறைக்குள் தான் இருக்கிறது.
ஆனாலும்
எப்படியோ தெரியவில்லை.
வானமில்லாமலேயே
இன்று விடிந்துவிட்டது.

● இன்று ஒரு
ஓவியனை சந்தித்தேன்
முதலில்
காட்டை வரைந்தான்
பின்
ஒவ்வொரு மிருகங்களாக
வரைய ஆரம்பித்தான்
மான் ஒன்றின் பக்கத்தில்
சிறுத்தையை வரைந்தபோது
இரண்டும்
உயிர்பெற்றுக்கொண்டன.
உயிருக்குப் பயந்த மான்குட்டி
காடுமேடெல்லாம் ஓடியது.

கோரப்பசியோடிருந்த
சிறுத்தை வேட்டையாடத்துரத்திச்
சென்றது.

ஓவியன் அதனை
விளையாட்டைப்போல் ரசித்துரசித்து
சிரித்துக் கொண்டிருந்தான்
தீராப்பசியோடு
மான்குட்டியை நெருங்கிய
சிறுத்தையை நொடிப்பொழுதில்
மான்குட்டியாக மாற்றிவிட்டான்
சிறிதுசிறிது நேரத்திற்குள்
அவன் சிறுத்தையாகவும்
மான்குட்டியாகவும்
மாறிக்கொண்டிருந்தான்.

## அல்அமீனுல் தஸ்னீன்

**கவிதைகள்**

மணவாளக்குறிச்சி, கன்னியாகுமரி.

- எரிந்துத்தீரா ராத்திரியின்மேல்
பவ்வியமாய்
வாலறுந்த நினைவுப்பல்லி ஊர்கையில்
இருட்டையுண்டு காலம் கழித்த கவிதை
தன்
மவுனம் துறந்து காலாவதியாகிறது

மரண தண்டனை தீர்ப்பெழுதி
முனையொடிந்த பேனாவாய்
ஒற்றைவிளக்கின் சூக்குமத்தில்
காதல்இருப்பின் நாற்காலி.

இனிவரும் வாழ்வை
கவிஞனென்றே நரபலியிட
காத்திருக்குமிந்த தனியறைக்குத் தெரியுமா
அணுஅணுவாய் இறப்பதை
கைக்கொட்டி ரசிக்க
சாளரத்தின் வெளியே காத்திருக்கிற
நாளைய பிரபஞ்சத்தின் ஆதவனை.

● எல்லோரும் என் கவிதைகளுக்காயென்னை
துரத்தித்துரத்தி காதலித்தபோதும்கூட
கவிதைகளை ஏறெடுத்தும் பார்காதவள் நீ.

நான்வேறு
என் கவிவேறென
காதல் சொல்லும்போது
கவிதை கூடாதென சத்தியம் வாங்கி
என்னிலிருந்த சாத்தானை கதறக்கதற
விரட்டியடித்தாய்.

உனதன்பில் மெய்சிலிர்த்த
ஓர்நாளில் சத்தியம் மீறி
உனக்கெழுதினேன் கவி
வேதாளமென மரமேறிவிட்டாய்

நீபோன நொடியில்
மீண்டுவந்து விரட்டப்பட்ட சாத்தான்
தாம்பத்ய பதிமினுக்கி
கைரேகைக்கவிதை
எவரும் புணரா கவிதை
இப்படி பலபெயர் கொண்ட குட்டிச்சாத்தான்களை
எனதறைக்குள் பிரசவித்தவாறு குடியிருக்கிறது.

நீ பார்த்துக்கொண்டுதானிருக்கிறாய்.

அடுத்து பிறக்கப்போகும் நிர்வாண சாத்தான்
என்னோடு உறவுகொள்ளும் முன்
நீ இறங்கி வந்தென் நெற்றியிலொரு
கண்ணிய முத்தம் இடு பெண்ணே.

செத்தொழியட்டும்
இக்கவிதை சாத்தான்கள்.

## தாய்சுரேஷ்
### கவிதைகள்

- சாலை ஓரத்தில்
ஆப்பிள்களை
உருட்டி விளையாடும்
சிறுவர்களை
சிறிது நேர
ரசிப்புக்கு உட்படுத்திக்கொண்டு
அருகில் செல்லும்போதே
அணில் ஒன்றுடனான
போட்டியில்
அவர்கள்
ஆப்பிளை இழக்கும்
நொடியில்
அவர்களுக்காகவே பிரத்யோக
கனி ஒன்றை வீசிவிட்டு செல்கிறார்
கடவுள்
பழக்காரனின் குரல்
நகரும் இடமும்
அதே தான்.

● கிழக்கிலிருந்து
சாய்கோண கோட்டில்
90 அல்லது 180
தோராயத்திற்குட்பட்டு
வந்துவிழுகிறது
யாரும் அறிந்திடும்
முன்னரே
மஞ்சள் வெயில்.

12x24 அளவோ
அதைக் கடப்பின்
450x200
எனும் அளவிலோ
சாலையில் ஓவியம்
தீட்டிக் கொண்டிருக்கும்
தூரிகைக்காரனை
விரட்டவே செய்கிறது
சிலகுரங்குகளும்
குரைக்கவே முடியாத நாய்களும்

அப்படியும்
இறுதிவடிவம்
கொடுத்து முடியும்போது
அது
3x4x1
என்ற பொருந்திய அளவில்
குழந்தைகளின்
ஓவியமாகக் காட்சியளிக்கிறது.

இன்னும்
நாணயச்சிதறலோ
காந்தியின் புன்னகையோ
அதன்மீதான
தரிசனத்தை
உறுதி செய்யவில்லை
என்பதே
கடைசியான ஆறுதல்.

**தேனரசன்**
**கவிதைகள்,**
பொள்ளாச்சி-2.

● வல்லூறுகள் வட்டமிடும்தான் ஓயாமல்
வானத்தில்.

வேடர்கள் விரித்த வலைகள்
கிடக்கும்தான் காடெங்கும்.

வேட்டை வெறியோடு
தோட்டாக்களும் அம்புகளும்
எப்போதும் எங்கெங்கும்...

அதற்காக...

பாதுகாப்பு என்று எத்தனை காலம்
வெளியேறாமல்...
பதுங்கிக்கிடப்பது, ஒரு கூண்டுச் சிறையில்...
எனக்குப் பறக்கவே ஆசை...

● வார்த்தையை முற்றாய்ச் சுருக்கிப் பார்த்தேன்
நின்றது மௌனம்.

வாழ்க்கையை மொத்தமாய்ச் சுருக்கிப் பார்த்தேன்
வந்தது மரணம்.

படுக்கையை இறுகச் சுருட்டி வைத்தேன்
பறந்துபோனது தூக்கம்.

படிப்பதை அறவே நிறுத்திவைத்தேன்
பிறக்கலானது ஞானம்.

அன்பை அன்பைப் பெருக்கிவைத்தேன்
அருகில் இதோ சொர்க்கம்!

ஆசை ஆசை ஆசை வளர்த்தேன்
அதோ தெரிகிறது நரகம்.

## பாரதிவசந்தன்
### கவிதைகள்

● பிரக்ஞையின் தூரிகை
எழுதுகிற அரூபங்கள்
ஒன்று சேர்வதும்
பின் கலைவதுமாய்
தூரத்தில் தெரியும்
நிஜத்தின் சாயல்.

நிழலைப் பிடித்து
நிழலுக்குள் மறைத்து வைக்க
இருட்டின் பெயர் எழுதப்படுகிறது
அந்தகாரத்தின் பெரும்
வெளிச்சத்துக்குள் அமர்ந்தபடி.

ஞாபக அலைகளின்
வெள்ளத்தில் இழுத்துப்போய்
கரை ஒதுங்கிக் கிடக்கும்
காலைச் சூரியனில்
புது யௌவனம்.

ரசம் போன உடைந்த
கண்ணாடித் துண்டுகளின்
பிரதிபிம்பங்களில் பிரபஞ்சம்
சிதறிக்கிடக்க
எவருக்கும் தென்படாத
இடத்தில் இருந்துகொண்டு
என் மனச் சித்திரத்தை
வரைந்து கொண்டிருக்கிறேன்
பெரும் பாழ்வெளியில்.

● ஆணியடித்து மாட்டியிருந்தது
அறிவிப்புப் பலகை

வந்தவன் ஒட்டினான்
வாழ்த்துகிறோமென்று

எவனோ செத்துப்போக
வருந்துகிறோமென
எழுதிவைத்தான் இன்னொருத்தன்

வாழ்த்தியதால் மகிழவுமில்லை
வருந்தியதால் அழவுமில்லை

வருவோர் போவோரையெல்லாம்
வாசிக்கச் செய்துவிட்டு
அதுபாட்டுக்குக் கிடக்கிறது மௌனமாக

அதன் வாயில் எதை வைத்து
அடைக்கலாமென்றுதான்
அப்படியும் இப்படியுமாக
அலைமோதிக் கொண்டிருக்கிறான்
புதிதாக எதையோ
எழுத வந்த ஒருத்தன்.

**துறவி,** சென்னை.

● தேடு
தேடிக்கொண்டே இரு
தேடுதல்தான்
துலக்கித்துலக்கி
உன் துருவை நீக்குகிறது.

தேடாதவன் வெறுங்கையனாக இருக்கிறான்
தேடுபவன்
எதையேனும் பெறுகிறான்.

இருட்டுக்கு
வெளிச்சம்தேடியவன் தீபமானான்.

வேர்களின் தேடுதல் நின்றுபோனால்
தாவரங்களின் சமாதிக்குத்
தடைவிதிக்க யாராலே இயலும்.

உளியைத்தேடும் பாறையே
சிற்பமாகிறது.

ராகம்தேடும் ஓசையே
இசையாகிறது.

தேடிக்கொண்டே இருப்பவன்
வாழ்ந்துகொண்டே இருக்கிறான்.

வானம் தேடாத பறவைக்கு
அதன் சிறகுகளே பாரம்.

பள்ளம்தேடும் நதியாக இருக்காதே
தேங்கிப் போவாய்.
சமுத்திரம்தேடும் நதியாக இரு
இயங்கிக் கொண்டே இருப்பாய்.

நீ யார் என்பதை
உன் தேடலே
மற்றவருக்கு தெரிவிக்கிறது.

பூவைத்தேடும் காற்று
மணமாக மாறுகிறது.

கழிவைத்தேடும் காற்று
நாற்றமாக வீசுகிறது.

தேடுபவனாக மட்டும் இருக்காதே
தேடப்படுபவனாகவும் மாறு.

பரம்பொருளைத் தேடியவன் பக்தனாகிறான்
புத்தகங்கள் தேடியவன் புத்திசாலியாகிறான்.

ஆயுதங்கள் தேடாதே
உன் ஆயுள் ரத்தத்தால் ஈரமாகும்.
கருவிகள்தேடு
உன் களஞ்சியங்கள் நிரம்பும்.
ஆசைகளைத் தேடித்தேடி அலைபவன்
அமைதி இழக்கிறான்.

ஆதிநாள் தொட்டு
இன்றுள்ள அதிசயங்கள் யாவும்
தேடலின் கர்ப்பத்தில் உதித்தவையே.

சூரியனைத்தேடும் இருட்டே
தன்னை
வெளிச்சத்தில் அலங்கரித்துக்கொள்கிறது.

வெளியில் மட்டுமல்ல
உனக்குள்ளும் தேடு.
உன்சுயரூபம்
அப்போதுதான் தெரியவரும்.

தன்னைத் தானே தேடுபவன்
தடுமாறி வீழ்வதில்லை.

மரணம் காத்திருக்கும்
புழுவைத்தேடும் மீனாக இருந்தால்.

வாழ்க்கைக் காத்திருக்கும்
பூவைத்தேடும் வண்டாக இருந்தால்.
தேடல்
உனது பரிணாமத்தின்
இன்னொரு விழிப்பு.

தேடல்களின் சங்கமம் தான்
மானிட வாழ்க்கை.

கல்லறை என்பது வேறொன்றும் இல்லை
மனிதத்தேடலுக்கு
மரணம் வைக்கும் முற்றுப்புள்ளி.

சென்னிமலை. **தண்டபாணி.**

● கைவசமிருந்த
ஒரே ஒரு கனவையும்
விலைகூறி
விற்றுவிட விரும்பினேன்.

வண்ண ஒப்பனைகள்
எதுவுமற்ற அதை
வாங்குவாரில்லை

எந்த அடையாளம் சொல்லி
வாடிக்கையாளர்களை வரவழைப்பது
என்பது குறித்தும்
எதுவும் தெரியவில்லை.

கேட்பாரற்றுக்கிடக்கும்
அதைக்
கையிலெடுத்துக் கவனித்தேன்.
புத்தம் புதிதாகத்தான்
இருந்தது அது
எனினும்
வாடிக்கையாளர் எவரும்
வராத காரணம் அறியேன்.

கண்மலர்ந்த கனவு
என் கைபிடித்துச் சொன்னது:
நல்ல விலைவரும் நாள்வரை
பொறுத்திரு
அதற்குள் ஏனிப்படி
அவசரப்படுகிறாய்?

என்னபதில் சொல்வது
என்றறியாமல் மௌனம் காத்தேன்.

சும்மா இருக்குமா துள்ளும் மனது?
கனவை விற்றுக்
காசு பார்க்கலாமென்று
சொல்லிச்சொல்லித் துரத்திய மனது
துடிதுடித்தது.

அவசர அவசரமாய்
அலங்காரச் சுவரொட்டிகளில்
விற்கப்படும் கனவை
விளம்பரம் செய்தேன்.

பார்த்துச் சிரித்துப் பரிகசித்த
பேர்வழிகள்
பகல்கனவு காண்கிறான் பாவிமகன்..
நம்மிடம் இல்லாத கனவுத்தோட்டமா?
இவனோ
ஒற்றைக்கனவை வைத்துக்கொண்டு
ஊரைக் கூட்டுகிறான்
எவனுக்கு வேண்டும் இவன்கனவு?
விடியவிடியக் கண்விழித்த கனவு
ஒருமுறை சொன்னால்
உனக்குப் புரியாதா?
அவனவன் கனவுகளை
ஒன்றுக்கு இரண்டாய் இலவசமாய்த்
தருகிறான்.
இதில்
உன் ஒற்றைக் கனவு எப்படி
விலைபோகும்? என்றபடியே
வெடித்துக் கிளைவிடத் தொடங்கியது.
மனம்
ஒரு பறவையாகக் கிளையமர்ந்து
இசைக்கத் தொடங்கியது.

பேராசிரியர். **இரா.சோதிவாணன்.**

● புதுத்தினை போலப்
பூமேனியில் விளைச்சல்
நெல்லிக்காய் போல
ஊடுபயிர்க்கட்டிகள்
வைக்கோல் போலக்
கிழிறங்கும் உப்புநீர்ப்பாசனம்
ஊதுலைப் பை போல
ஊட்டி விடும்
வெப்பப் பெருங்களை
மூச்சு
சூளைத் தீப்போலச்
சுடுவதால்
பூமித்தாயின் வாய்வெடிப்புகள்
அறுவடை செய்யமுடியாத
அதிகச் சாகுபடியால்
அதிகம் சாகும்படி உயிர்கள்
சிறகே இல்லாமல் பறந்து
அலகே இல்லாமல் கொத்தும்
வேட்டையாட முடியாத
வெப்பப் பறவைகள்
கோடைக் கொடுங்கதிரவனைக்
கிழக்கு வாசலிலேயே
நிறுத்தி வைக்க
ஒரு நளாயினி
வருவாளோ இன்று?

**கலைச்செல்வி**, திருச்சி-21.

● உனது வேகமும்
எனது கோபமும்
முகம்காட்டா நாழிகையில்
சந்தித்து
உணர்வு வெளிச்சங்களை
வெளியிடுகையில்
காலடியில்
நழுவிக்கிடக்கிறது
காலமும், நேரமும்.

**விக்ரமாதித்யன்நம்பி.**

- அன்பெனும் வார்த்தையை
அகராதியிலிருந்து எடுத்துவிடலாம்
அம்மாவின் நினைவு இருக்கும்வரையில்
அது நடக்காது.

காதலென்ற சொல்
காலாவதியாகிவிடாதுபோல
அடுத்தவன் வீடுபோனபின்னும்
நலம் விசாரிக்கும் நல்ல உள்ளம்

பந்தமெனும் வார்த்தை
பொருளற்றுப்போய் விடவில்லை
இவள் சகிப்புத்தன்மையை
இப்படித்தான் புரிந்துகொள்ள முடிகிறது.

எனக்குத் தெரிந்தவரை இன்றைய தினம்
அர்த்தமுள்ள சொல் மக்கள்
அவர்களுக்காகவே வாழ்கிறேன்
அசுரகுருபோல
நீரடித்து நீர் விலகாது.

**க்ருஷாங்கினி.**

● நிகழ்வு சலனங்கள் கொண்டது
முன்பின் அடுக்குகளுக்கு இடையில்
சில மாற்றங்களையும், சில கண்ணிகளையும்
உள்ளடக்கியது.

நிகழ்வு தொடர்ச்சியானது
ஒவ்வொன்றுக்கும் தொடர்பு
இருந்தும் இல்லாமலும்
தனித்தும் இணைந்தும்
மேலும் கீழும் என
சங்கிலிகளாய் வழிநெடுக
பரவிக் கிடக்கிறது.

நிகழ்வு பதிவாக மாறும்பொழுது
அந்தக்கணம் சலனம்இன்றி
உறைந்து நின்றுவிட்டிருக்கிறது
முன்பின், மேல்கீழ் ஏதுமற்ற அந்த
ஒற்றைக் கணம் மட்டுமே.

திரும்பத் திரும்பப் பார்க்கப்படுகிறது
எடுத்து, எடுத்தும்
பார்ப்போரின் பார்வையில் ஒற்றைக்கணம்
மாற்றி, மாற்றி, மாறி, மாறிப்
பதிவாகிறது.

பதிவு செய்யப்படும் பொழுதெல்லாம்
பதிப்போரின் சலனத்துடன் பதிவு
நிகழ்வாகப் பதிவாகிறது.

அவரவர் தளங்களில், அவரவர் நிறங்களில்.
அந்தக்கணத்தின் உறைவு காணாமல்
நிகழ்விலிருந்து பதிவான உறைவு
எல்லா சலனங்களுடனும் அதுவே
நிகழ்வாய்ப் போனது.
நிகழ்வே பதிவாக, பதிவே நிகழ்வாக...

வளவ.துரையன்,
கடலூர்.

● இந்த மழையைப் புரிந்துகொள்ள
நிறைய விஷயங்கள் இருக்கின்றன.

வாழையிலையின் நடுப்பகுதியை
வாய்க்காலாகக் கொண்டுவரும்
நீர் அழகுதான்.

எங்கேனும்
தெருவோர இட்லி கடைக்காரி
கஷ்டப்படக்கூடும்.

நிசப்தங்கள் எல்லாம் கிழிபட்டு
நீரொலியின் ஆட்சிக்கு
வழிவிடுகின்றன.

அழகான பெண்களின்
ஆடலாக நீர்க்கோடுகள்
அசைந்து ஆடுகின்றன.

கூரைகளின் கண்களை
அந்தமழை அரூபமாகத்தான்
ஊடுருவிப் பார்க்கிறது.

இந்த மழையைப் புரிந்துகொள்ள
இன்னும் நிறைய இருக்கிறது.

**ப.மதியழகன்,**
**மண்ணார்குடி.**

● கதவில் பூட்டு தொங்கியது
காலையில் நான்தான் பூட்டினேன்
இந்தநாய்
நகர்ந்து தொலைக்ககூடாது
வாலை மிதித்துவிட்டேன்
நல்லவேளை கடித்து தொலைக்கவில்லை
வீட்டில் வைத்தது வைத்தபடி
அப்படி அப்படியே இருந்தது
கலைத்துப்போட குழந்தையுமில்லை
துவைத்துப்போட மனைவியுமில்லை
அலமாரியிலிருந்து புத்தகங்களை எடுத்து
மேசையின் மீது வைத்தேன்
தன்னைப் பற்றிச்சிந்திப்பது
ஞானத்தை பரிசளிக்கும்
ஆனால் ஊர் பைத்தியம் என
பட்டம் கட்டிவிடும்
வாசலில் பூனை கத்தியது
இரவு உணவில் பங்குகேட்க
முன்பே வந்துவிட்டதுபோலும்
படுக்கையை விரித்தேன்
இனி என்னிடம் வாலாட்ட முடியாது
இவ்வுலகம் என்று
எப்போதும் போல்
நினைத்துக்கொண்டு படுத்தேன்
விடிந்ததும்
எவரிடம் கைகுலுக்கி
எவரைப் புகழ்ந்துபேசி
எவர் ஜோக்குக்கு
சிரிக்க வேண்டியிருக்குமோ
சாக்கடையில் குளித்துவிட்டு
சந்தனத்தை பூசிக்கொள்வதுதான்
வாழ்க்கையோ.

**கா.அமீர்ஜான்,**
**திருநின்றவூர்.**

● தேடியும்
கிடைக்கவில்லை என்பதில்
படவேண்டியதில்லை வியப்பு...

எனினும்
தேடாமல் இருக்க முடிவதில்லை
நிர்ப்பந்திக்கப்பட்ட தேவைகளின் நிமித்தம்...

கருப்பை முதல்
தடியூன்றும் காலம் வரையிலும்
தொடர்கிறதில் இருக்கிறது
ரகசியப்படுத்தும் தேடலின் மனம்...

விலா முறிபடினும்
விடாப் பிடியாக விரைகிறது வசப்படுத்த
தேடலும் தேடலுக்கான போராட்டமும்;
துவண்டுவிடாமல்...

அடாவடித்தனங்களின் அட்டகாசம்
ஆணவ அதிகார அடக்குமுறை என்பதான
அராஜக ஆளுமைகளை உடைத்து
உள்புகுந்து தேடுவது அவ்வளவு சுலபமல்ல
எல்லாருக்கும்...

மௌனத்துள் நுரைத்து
தேடும் நிசப்தத்தின் வலி தெரிவதில்லை
புறத்திற்கு;
பாறை பிளக்கும் வேறென...

தேடலின் பயணம் விடாது தொடர
நிஜமற்ற நிழலும்
நிழலாகிப் போன நிஜத்தின் பிம்பங்களும்
பிடறியை உலுக்கி வேடிக்கைக் காட்டுவதில்
அகப்படாமல்
திணறுகிறது வாழ்க்கைக்கானத் தேவைகள்;
காலத்தின் காலடியில் நசுங்கி...

**ரிஷபன்,**
**திருச்சி.**

● சுமந்துகொண்டு
திரிகிறேன்
தேசாந்திரியாய்.

சத்திரங்களில்
தலையணையாய் வைத்துத்தான்
நீள் உறக்கமும்..

நள்ளிரவில்
திடுக்கிட்டு விழித்துப்
பார்க்கையில்
விலகித்தான் கிடந்திருக்கிறது

தொலையாமல்
என் கவிதைமூட்டை.

யாழி, கோவை.

● தன் நிழலை வைத்து
தன்னை எடைபோடத் தொடங்குகிறான் அவன்
துவக்கம்
படு அமர்க்களமாய்
நீண்டுகிடந்தது நிழல்
நீண்டுகிடக்கும் தன் நிழலின்
நீல அளவுகளைச் சொல்லிச்சொல்லி
புளகாங்கிதமடைகிறான்..

ஏறுவெயிலில்
பருகத்தொடங்கியது நிழல்
இப்போது
முன்னைவிட உற்சாகமானான்
பருத்துக்கிடப்பது தன்னின்
ஆளுமைகளாகவே
எண்ணிக்கொண்டான்.
சுழற்சியில் கீழிறிங்கும் சூரியன்
முளைத்த அவனின் கொம்புகளை
சுருங்கச்செய்கிறது.

தன்னை நிழலில் தேடிய அவன்
தன் காலின் கீழேயே
குறுகிக்கிடக்கும் நிழலை
மிதித்தபடியிருக்கிறான்.

வலி தொடங்கிவிட்டிருந்தது
அவனின் கால்களுக்கும்.

அருணாசுந்தரராசன்,
மானாமதுரை.

● குற்ற உணர்ச்சி ஏதுமின்றி
பயணிக்கிறாய்
உன் திசை நோக்கி...
இதயம் பிழிந்து
வடிகிறது குருதி
வழிவழி வழிகிறது
காதல் நீர்த்துளி...
வானப் புத்தகத்தின்
பக்கங்களைப் புரட்டுகிறேன்
நட்சத்திரங்களையும்
எனக்கான நாட்களையும்
எண்ணிக் கொண்டிருக்கிறேன்
நட்சத்திரங்களே அதிகம்.

அனலேந்தி.

- தீ மூட்டிப்
பற்றியெரிந்த வார்த்தைகள்
அடங்கியிருந்த
மௌனத்தை உசுப்பிவிட..

இதுவரை
எட்டிப்பார்க்காத வசந்தகாலத்தை
வலிக்காமல்
இழுத்து வந்தது மழைமேகம்..

அதன்
விதவிதமான
வண்ணச் சேர்க்கைகளின்
அழகுக் கண்காட்சியை
பனித்துளிகள் பிரதிபலிப்பதை

எந்தச் சொற்களிட்டு நிரப்புவது
எனத் தடுமாறிய எனக்கு
குயில்கள் குரல்கொடுக்க
கிளிகள் கொஞ்சிவர

துளித்துளித் தூறல்கள்
நறுமணமேந்தி திசைகள் மணக்க...
இன்னமும் கூடப்
பிடிபடவில்லை காத்திருந்த
கண்ணாடிச் சொற்கள்..

சரிதான்
நாளை மீண்டும் வரும்
என நம்பிக்கை கொண்டபோது
இங்கே
காணாமல் போயிருந்தது
கைப்பேசிக்குள்
இயற்கையின் காலம்...

**கோ.மகேசன்,**
மாத்தூர், சென்னை-68.

● எந்தக் குழந்தையும்
பூச்சாண்டி காட்டி
மிரட்டுவதேயில்லை
சாப்பிடச் சொல்லி
பொம்மைகளை.
அடம்பிடித்து அழும்
ஒருசில குழந்தைகளுக்காக
உதட்டின் ஓரத்தில்
ஒன்றிரண்டு
சோற்றுப்பருக்கைகளை
ஒட்டிக்கொண்டு
உண்ணாமல் உலரவைத்திருக்கும்
பொம்மைகளைக் கண்டு
பூச்சாண்டிகள்
பயந்து போனதுண்டு.

**சுப்ரா,**
**திருநெல்வேலி.**

● எழுதப்படும் எல்லா வரிகளும்
ஏற்கனவே எழுதப்பட்டு விட்டதாகவே
இருக்கின்றன.

யாரால்... எப்போது... எங்கே...
எதுவும் தெரியவில்லை.

எனினும்
எழுதப்பட்டு விட்டன என்றே
உணரத் தோன்றுகிறது.

வாழ்க்கையும் அப்படியேதான்
எத்தனை விதமாக வாழ முயற்சித்தும்
ஏற்கனவே யாராலோ
எப்போதோ
வாழப்பட்டு விட்டதாகத்தான்
தோன்றுகிறது.

அதனால்தான்
வாழ்க்கையும் கவிதையும்
அதனதன் போக்கில்
இயங்கிக் கொண்டே இருக்கின்றன.

**கன்னிக்கோவில். இராஜா**

● மனப்பறவையின் கனவுச்சிறையிலிருந்து
மீள முயல்கின்றன இமைகள்.
வேலைப்பளு, குடும்ப பாரமென
சிக்குண்ட உடலால்
திறக்க மறுக்கின்றன இமைகள்.

நாளைக்கான கவலைப் பூச்சிகள்
கனவு தேசப் பூக்களை
உறிஞ்சிக் கொண்டிருக்கின்றன
அணுஉலைக் கிணறுகளாய்.

கனவுகளுக்குள்
ஆறாய் ஓடிக்கொண்டிருந்த
கண்ணீர்த் திவலைகள்
வரிசையில் நிற்கின்றன
கரங்கள் முளைத்த ஆக்டோபஸ்சாய்.

காப்பாற்றக் கோரும் உதடுகளைப்
பொத்தி பொத்தி விளையாடுகிறது
வேடிக்கைப் பார்க்கவந்த காற்று.

விழி திறக்கையில்
வியர்வையை துணைக்கு வைத்துவிட்டு
ஓய்விலிருந்தது
மின்தடையால் சிக்குண்ட மின்விசிறி.

**வசந்ததீபன்,**
**பெரியகுளம்.**

● நிறம் மாறும் வானம்
நிகழ்த்தாது நிகழும் அற்புதம்.
நீர்த்துளிகள் காற்றில்
மணிகள் கோர்த்து துலங்குகின்றன.

பறவைகள் ஆர்ப்பரித்து
பசியைக் கொன்ற களிப்பில்
கூடுநோக்கி விரைகின்றன.

வண்ணப்பூக்கள் அந்தியில் முகம்கழுவி
மலர்ச்சியால் ஒளிர்கின்றன.

வர்ணங்கள் இணைந்து
வண்ணக்கொடித் தோரணமாய்
வானவில் வளையம்
கிழக்கை அலங்கரிக்கிறது.

ஊறிய நிலத்தில்
உருவங்களைப் பதித்தபடி ஊரும்
என்பாதங்கள்
விறுவிறுப்பேற சூகைபிடிக்கின்றன.
தென்றலில் குளித்து தலைஉலர்த்தும்
தென்னைகள் சிலிர்த்து ஆடுகின்றன.

விழிகளில் பிடிபடும்
காட்சி ரூபங்களில்
பூத்தெழும் கனவுகளை
உதிர்த்துவிட்டு விரைகிறேன்...
வீட்டில்
பசித்த வயிறுகள்
பரிதவிப்பாய் காத்திருக்குமென்று.

**சுவாமி இராமானுஜம்,**
பெங்களூர்-29.

● மரப்பாச்சி
பொம்மைக்கு
மாமியார்
என்ற பட்டம்
கொடுத்து
மருமகள் என்று
பக்கத்தில்
ஒரு பொம்மையை
வைத்தால் போதும்
நறுக்கு நறுக்கு
என்று
கொட்டியபடி
இருக்கும்
மாமியார்
பொம்மை.

வண்ணை சிவா,
சென்னை..

● நதியிருந்த இடத்தை
நீண்ட மணற்பரப்பென்கிறாய்
மாற்றியமைத்து
வயல்வெளி அழித்து
வீட்டுமனை நிலமென்கிறாய்
விலங்குகள் பறவைகள்
உலவிய காட்டையழித்து
மடக்கி வேலியமைத்து
மனிதர்கள் வசிப்பிடமென்கிறாய்
பசியென்று யாசித்தவனுக்கு
சோறிட மறுத்து
இருப்பவர்க்கே ஆலயத்தில்
அன்னதானம் செய்கிறாய்
நாகரீகமற்று நடந்துக்கொண்டு
நாகரீகமாக இருப்பதாகக் கதைக்கிறாய்
பரிணாம வளர்ச்சியில்
முதன்மையாக இருப்பதாகப்
பெருமிதம் கொள்கிறாய்
மாற்றம் ஒன்றே மாறாதது
மாறாமல் மாறிக் கொண்டிருப்பதாகச்
சொல்லிக் கொண்டு திரிகிறாய்
மனித வடிவில் உலவும் நீ.

**ஜி.சீனிவாசகோபாலன்,**
**காஞ்சிபுரம்.**

- நகராட்சி போட்ட சாலை
வீதி மேலுயர
வீடுகள் கீழிறங்க
தெருக்கோடிப் பிள்ளையார்
இனி
பாதாள பிள்ளையார்.

முனைவென்றி. **நா.சுரேஷ்குமார்,**
பரமக்குடி, இராமநாதபுரம்.

- ஆளரவம் எதுவுமில்லை
நள்ளிரவு நிசப்தம்

கேட்டுக்கொண்டே இருக்கின்றன
குளம்படி சப்தங்கள்
காதுகளில்

எந்தத் திசைநோக்கியும்
செல்லலாம்
அந்தக் குதிரை.

கடிவாளமும் அணிந்திருக்கலாம்
காற்றாய்ப் பறக்கும்
கனமழை பொழிவதற்காய்
கூடிய மேகங்களை
கலைத்துவிட்டும் போகலாம்.
அந்தக் குதிரை.

தூக்கத்திலிருந்து பலரை
தட்டியெழுப்பியிருக்கலாம்
அதன் கனைப்பொலி.

நிச்சயமாய் ஒருவன்
அமர்ந்திருப்பான்
அதன்மேல்

என்ன அவசரம்
அந்தக் குதிரைக்கு?

கேட்டுக்கொண்டே இருக்கின்றன
குளம்படி சப்தங்கள்
காதுகளில்.

**மன்சூர்அலி,**
**சவுதிஅரேபியா, ரியாத்.**

● கண்களில் பார்வை இல்லை
விரல்களில்
உரசிப்பார்த்தேன்.

விரல்கள்தான்
எனக்குக்
கண்களாய்த் தெரிந்தன.

பட்டம்பெற்றேன்.
பணியில்
அமரும்போது சொன்னார்கள்
நான்
ஒரு ஊனமுற்றவன் என்று
என்னால்
உணரமுடியவில்லை
என் மனம் கேட்கிறது
என்னிடம்
நான் ஒரு ஊனமுற்றவனா என்று?

கண்களை
விரலில் வைத்த
கடவுளிடம் தான் கேட்கவேண்டும்
யார் ஊனமுற்றவன் என்று.

பேராசிரியர். **வெ.சாக்கன்,**
இராணிப்பேட்டை.

● இரகசியங்களைக் கொட்டி நிரப்பிய
மனக்குளத்தில்
ஒற்றைச் செதிலுடைய மீனென
நீந்துகிறாய் கரைதொடாமல்
இழந்த செதிலுக்காய்
இரக்கம் கொண்டு
கைளிரண்டில் ஒன்றையெடுத்து
செதிலெனச் சேர்க்கவருகிறேன்
என் உதவிக்கரத்தை
உரிமையோடு உதறிவிடுகிறாய்
இறந்த புழுகொண்டு
உயிருள்ள உனைப்பிடிக்க
கரையிலொருவன் காத்துக்கிடக்கையில்
புழுவின் வாசமறிந்து
பயணத்தை மாற்றுகிறாய் நீ
நீட்டிய கையோ
நெடுந்தொலைவில் நின்றுபோக
மீண்டுமொரு கை முளைக்கிறது
மாறுமுன்னைத் தடுக்க.

சௌந்திரமகாதேவன்,
திருநெல்வேலி.

- பீமன் சிலையோ
அர்ஜுனன் சிலையோ
தெரியவில்லை
அந்தச்சிற்பி
அதைச் சினத்தோடு
செய்திருப்பான்
என்று மட்டும் தெரிகிறது.
அதன் ருத்ரம் பயமூட்டுகிறது
சிரிக்க மறந்த
அந்தச் சிற்பியின்
மனம்
அது கண்திறக்கும்போது
எப்படி இருந்திருக்கும்?
அந்தக்கணத்தின் கணத்தைக்
கண்களில் காட்டியபடி
அச்சிலை சினத்தைத் தொடர்கிறது
சில நூற்றாண்டுகளாய்.

**நீலநிலா செண்பகராஜன்.**

- மௌனத்தைக் கலைக்கும்
கடன்காரனின் பெருங்கூச்சல்..
நிராசையால் அரங்கேறாக்
கனவுகள்..
காமத்தைச் சொல்லாத
விலைமகளின் அன்பு..
தூக்கிலிடும் முன்ரசிக்கப்படும்
பழைய திரைப்படப் பாடல்..
செல்லிடபேசியில்
மொழிபெயர்க்காத எழுத்துக்கள்
இப்படியாக 12 வது வரியில் முடிவுறும் சில
வாழ்க்கை கவிதை.

**பிறைமதி.**

- அப்போது
  அந்த
  ஒற்றையடிப்பாதைக்கு
  இருபுறமும்
  செடிகளும்
  மரங்களும்
  பூக்களும்
  நிறைந்திருந்தன..
  இப்போது
  அவைகளெல்லாம்
  நிற்கின்றன
  கட்டிடங்களாய்..

கவனமாகத்தான்
நகர வேண்டியிருக்கிறது

பூக்கள் வடிவில்
சில
நெருஞ்சிமுட்களும்
முளைத்துள்ளன
எனது பாதையில்.

நான்
மரமாகி நிற்கிறேன்
நீங்கள்
நிழலில் நிற்க.

வெட்ட நினைத்தால்
வெட்டிக்கொள்ளுங்கள்.

மறவாமல்
வேரினை
விட்டுவிடுங்கள்.

இன்னும்
ஏராளமானோர்
நிழலில்
நிற்கவேண்டும்.

**ச.கோபிநாத்,**
**சேலம்.**

● பரந்து வியாபித்த உலகை
தன்னுள் சுருக்கி
தனிமையை
அடைக்காக்கப் பழக்கப்பட்டுவிட்டது மனம்.

எச்சூழலிலும்
பிறிதொரு மனித மனதை
அன்பால் தொடும் வாய்ப்பிழந்து
அரூபமென சுயம் மேலெழுகிறது.

தான்
தனது
என்ற எல்லகளுக்குள்
உலகமே சுருங்கிவிட்டதாய்
எண்ணம் கொள்ளும் மனதில்
நேயம் மலர்வதற்கான
சுவடுகள் மறைய
மனிதத்தின் உருவென
தன்னையே கொண்டாடிக் கழிக்கும்
ஆனந்தத்தின் பெருவெளியில்
துளித்துளியாய் பரவத்தொடங்கியது
சுயமென்னும் நஞ்சு.

கா.ந.கல்யாணசுந்தரம்,
செய்யாறு.

● முன்னுரை எழுதினர்
முதல் பக்கத்தில்
பெற்றோர்.

ஒளிந்திருந்தனர்
அணிந்துரை தந்த
உறவுகள்
பின் குறிப்புகளில்.

நட்புத்தாட்களில்
எனது சாதனைகள்
தலைப்புகளானது

திசைமாற்றிய
தடைக்கற்கள்
அருஞ்சொல் விளக்கமாய்
உடைத்தெரிக்கப்பட்டன.

முடிவுரைக்கான
பக்கங்களை
பிள்ளைகளுக்காய்
பகிரப்பட்ட எனக்கு
அட்டைப்படத்தில் கூட
இடம்பெறப்
பிடிக்கவில்லை.

அடையாளம்
தொலைத்தபின்
இன்னொரு முகமூடி
எனக்கெதற்கு?

**குறிஞ்சிமைந்தன்,**
**புதுதில்லி.**

- இரவுகளின் வெளிச்சத்தைத் திருடிய
ஓர் பகலவனைத்தேடி
எனது கவிதைகளுடன்
என் இருப்பிடத்தைவிட்டுப் புலம்பெயர
என்னைத்
தயார்படுத்திக் கொண்டிருந்தேன்.

போகும் இடமானது
நெருப்பைப் பருகும் இடமாக
இருக்கக்கூடும் என்பதற்காக
ஒரு பெண்ணிடம் உடல் சுகத்தைச் சிலகாலம்
கடனாகப் பெற்றுவரலாம் என்கிற
முனைப்புடனே
அவளது இருப்பிடத்தை அடைய
எனது கால்களோடு
எண்ணியிருந்த குறிக்கோளுடனும் சென்றேன்.

நெடுநேரம் நடக்கையில்
என் கால்களோடு
எனது குறிக்கோளும் சோர்வினை அடைய,
சற்றுநேரம் இளைப்பாறிவிட்டுச் செல்லலாம்
என்ற தீர்க்கமான முடிவினை எனது
வயிற்றுப்பசி
எனது காதுகளிரண்டில்
கூவிக்கொண்டிருந்தது.

அடுத்தஅடி எடுத்துவைக்கமுடியாமல்
தவழ்ந்து பார்த்து
எனது சோர்வுடனேயே ஐக்கியமான
எனது கவிதைகளும்
உயிரற்ற நிலையை
வெளிப்படுத்தத் தொடங்கியது.

பெருத்த நெடிகளின் சூழ்ச்சியால்
துவண்ட எமது உடலானது
எதையும் வெளியேற்றமுடியாமல் வற்றியிருந்தது.

நேரம் கழியக்கழிய
எனது தேடல்களும்,
நான் தேடிவந்த உடல்சுகமும்
இறுதியில்
பாலையாகவே போய்விட்டது.

**சா.இரா.மணி,**
**வந்தவாசி.**

● தொடர்ந்து விளையாட
முடியாமல் தொடர்கிறதென் பயணம்.

வழிப்போக்கனாய்
நான்.

வழியில் விளையாடிக்
கொண்டிருந்த
சிறுவர்களைக் கண்டதும்

ஞாபகங்கள் அழைத்துவந்து
விட்ட மைதானத்தில்
நானும்
விளையாடத் துவங்கினேன்.

பாதையில்
எதிர்கொண்ட
கல்லொன்றில் தடுமாறி
தடுக்கிவிழ
தடைபட்டு விடுகிறது
மனதிற்குள்
என்
பால்யகால விளையாட்டு.

**துளசி,**
**ஸ்ரீரங்கராங்கராஜபுரம்.**

● முதல் மதிப்பெண் எடுத்து
பெற்றோர்க்கும் மற்றோர்க்கும்
பெருமை சேர்த்தவன்
வறுமையை மெல்ல முடியாமல்
உழன்று கொண்டிருக்கிறான்.

பள்ளிக்கு காரில் வந்திறங்கும்
வாத்திமகன் மக்கு மகேஷ்
பள்ளி நிர்வாகியானான்.

மணம்முடிந்த ஆறே மாதத்தில்
மனம்முறிந்து விதவைக்கோலத்தில்,
பிறந்த ஊரின் வயல்வெளிகளில்
உழைத்துத் திரும்புகையில்
பார்த்துவிடலாம்.
சட்டம்படித்திட ஆவல்கொண்ட சுமதியை.

ஒன்றுக்குமே லாயக்கற்றவன் எனப்
பட்டம் வாங்கியவன்
கல்வித்துறை அமைச்சரானான்.

ஆசிரியர் மிரட்டலுக்கு
அழுதுவிடுகிற தமிழ்
காவல்துறையில் அதிகாரியானான்.

மரக்கன்னு நட்டு
சுற்றுச்சூழலில் ஆர்வம்காட்டியவன்
பட்டாசுக்கடைக்கு முதலாளியானான்.

வகுப்பில் பேசியவர்கள் பெயர் எழுதியவன்
எப்பொழுதாவது தட்டுப்படுகிறான்
மண்டபங்களில் மொழியெழுதியபடி.

அடிக்கடி விடுமுறை எடுத்து
அவ்வப்பொழுது
திருடி மாட்டிக்கொள்ளும்
பிரபுவின் புகைப்படம் தவறாமல்
தென்பட்டுவிடுகிறது
திருடர்கள் ஜாக்கிரதையென
தெளிவற்ற பேனர்களில்.

**அ.பிரமநாதன்,**
காசங்காடு.

● பண்டிகை நாளில்
பலகாரம் செய்யும்
அம்மாவிடம்
எல்லாமும் எனக்கு என
அடம்பிடித்து
அழுகிறது குழந்தை.

சாமி
கண்ணைக்குத்திடும்
சாமி கும்பிட்டபிறகு
சாப்பிடலாமென
சமாதானம் சொல்லித்
தூளியில்
தூங்க விடுகிறாள்
அம்மா.

தூளியில்
தூங்கிவிடுகிறது
குழந்தை
சாமியும்
சாப்பிடவில்லை
கடைசிவரை.

**கருமலைப்பழம்நீ.**
**சென்னை.**

- அவிழ்க்க முடியாமல்
அவதிப்பட வைக்கும்
முடிச்சுகளைக் கண்டு
முணு முணுக்காதீர்கள்.

முடிச்சுகள்தான் முனைப்பாக
முயன்றிடத் தூண்டுகிறது.

முகம் சுளிக்க வைத்து
மனத்துக்குள் ஆரவாரிக்கும்
முரண்களை வெறுக்காதீர்கள்.

முரண்கள்தான் படைப்பாற்றலை
முழுமையாக்குகின்றது.

விடைகாண முடியாமல்
தத்தளிக்க வைக்கும்
கேள்விகளைப் புறக்கணிக்காதீர்கள்.

கேள்விகள்தான் வாழ்க்கையைக்
காலூன்றி நிற்க வைக்கிறது.

மனதை அசைத்துப் பார்த்து
அழவைத்து ரசிக்கும்
தோல்விகளைக் கண்டு
துவண்டு போகாதீர்கள்.

தோல்விகள்தான்
வெற்றிக்கு வழிவகுக்கிறது.

முரண்களின் முகங்கள்
பாதையில்
அழகானதுதான்.

சு.சத்யவீணா,
ஆர்.ரெட்டியபட்டி.

● தலைவாசல் நிலையில்
சங்கு சக்கரம்

வீட்டு முகப்புச் சுவரில்
பிள்ளையார்.

நுழையும் முன்
கம்பளிக் கயிற்றில்
தொங்கும்
கோரமுகம்.

வீடெல்லாம்
சாமிப்படக் காலண்டர்கள்.

நான்கு திசைகளில்
சுவரோவியமாய்
இறைவனைக் குறிக்கும்
அடையாளக் குறியீடுகள்.

யாரை விரட்ட?
யாரை வரவேற்க?

புரியாமல் தடுமாறி
நிற்கிறேன்
தனிமையிலிருக்கும் வீட்டில்
அம்மாவைப் பார்த்ததும்.

**கா. இளையராஜா,**
**சாத்துக்கூடல்**

- மின் கம்பியில்
சிக்கிக்கொள்கிறது காற்றாடி.

மழைநீரில் கவிழ்ந்துபோகிறது
விடுகிற காகிதக்கப்பல்.

வாங்கிய சிறுபொழுதிற்குள்
வெடித்துப்போகிறது பலூன்.

எப்படித்தான்
கவனமாக
பார்த்துக் கொண்டாலும்
வீணாகிவிடுகிறது
சாவி கொடுக்கப்படும் பொம்மை.

விளையாட்டில்கூட
மனம்
தளர்வதென்பது உண்டுதான்
ஆனாலும்
விளையாடுவதை
நிறுத்திக்கொள்வதில்லை
குழந்தைகள்.

**வாலிதாசன்,**
முகவை-15.

● வாசலுக்கு வந்துகிடந்தன
வயிறுமெலிந்த
சமையல் பாத்திரங்கள்
அடகுவைத்தவை போக;

பூட்டப்படாத வீடு
சுழற்றி வீசப்பட்டுக்கிடந்தது
மானத்தை இழந்தவாசல்

பாத்திரம் தேய்க்கப்போன
தங்கச்சித் துணிமணிகள்
கொம்பின்றிக் கொடிபிடித்தன.

வீட்டு முற்றத்தில்
மூலையில் ஒதுங்கிஇருந்தது
அதட்டலுக்கு
அக்காவின் பயம்.

தாய்கோபித்துக்கொண்டு போனதைப்
பக்கத்துத் தெருவிலிருந்த
பாட்டி
அசிங்க அசிங்கமாச் சொன்னது.

எட்டி உதச்ச
தண்ணீர்க்குடமோ
ஏனோ தானமாய்.

கைலி அவிழ்ந்து கிடந்த
தந்தையின் அருகில் மதுப்பாட்டில்
உசாரற்று.

முதுகில் புத்தகப்பாரத்தோடு
பார்க்கும்போது
நினைவு வந்தது
ஜோதி டீச்சரின் வீட்டுப்பாடம்
செய்யணுமே என்று.

வே.ம.தமிழரசு,
நாமக்கல்.

● முழுதும் தெரியாமல்
மூடிவைத்திருக்கிறேன்
கவனமாக யாரும் காணாவண்ணம்.

ஈடேறியதும் சொன்னால்
இசைவாகத் தலை அசைக்கும்.

உள்ளத்தில் உள்ளவைகள்
உருப்பெறுகையில்
உன்னதம் உலகறியும்.

முட்டைக்குள் முடங்கியிருந்தாலும்
வெளிவருகையில்
வானவெளியளக்கும்
என் எண்ணச் சிறகுகள்.

ஆற்ற வேண்டியவற்றை
ஆற்றுகையில்
போற்றுவர் அயலாரும்.

நீரினுள் நிறுத்திக்கொண்டு
நீள, அகலம் பேசுவது ஆகாது

கார்முகில்விட்ட நிலவாய்க்
கண்ணில்பட வேண்டும்.

நல்லதல்ல என் உயரத்தை
நானே அளப்பது.

**ரத்னம் ஜெயகுமார்,**
**திமிரி.**

- பிறருக்கு சொன்ன சொல்தான்
பிரமனுக்கும்.
தலைஎழுத்தென்ன
தனிஎழுத்தா?
கவிஞனுக்கும் கடவுளுக்கும்
மன்றம் ஒன்றே.
முறையிடுதல் முறைதான்
முறைத்தாலும் விடமாட்டேன்.

யோசித்து யோசித்து
சூழ்நிலைக்கு ஏற்றாற்போல் சூலுற்று
அனைத்தையும் தின்று
அஜீரணித்து
சித்தம் மழுங்கி
முக்கித்தவித்து
அவசரப்பிரிவில் அரைகுறையாகப்
பிரசவித்த
பிழையான படைப்புகளை
பார்க்க நேர்கையில்...

வரிவரியாக அடிக்கத்தான் தோன்றும்
வசைபாட எண்ணம் வரும்
மீண்டும் மீண்டும்.

அழகான வெள்ளைத்தாள் தான்
அதிலொன்றும் குறையில்லை
தலையில்
பிள்ளையார் சுழிபோட்ட
பிறகுதான்
பிழையெல்லாம்...

**சக்தி,**
**திருத்துறைப்பூண்டி.**

- தடாகமொன்றிலிருந்து
எனக்களிக்கப்பட்ட மீனுக்கு
உயிரிருந்தது.

கொழுத்து நீண்டிருந்த
அம்மீனுக்கு
எல்லைகளில்லா உலகில்
திசைகள் பொடிபடத்
தடாகமெங்கும் பிரவேசிக்கும்
அதன் சுதந்திரம்
முகாந்திரமற்ற மனிதனொருவனால்
சிதையுண்ட மிரட்சி.

மீதமிருக்கிற தன் கண்களில்
இடமைாற்றத்தினூடே
உணவாகும் அச்சமதற்கு

மீன் தொட்டியொன்றில்
இட்டுவைத்தேன் நீருடன்
பேசவியலாத அதன் இதழ்கள்
நானிருக்கும் திசை நோக்கி
சித்திரம்போல் நீரிலெழுதுகின்ற
சாபமா என உணர வாய்ப்பில்லை.

விளங்கிடவியலாத துயரொன்று
பீடித்திருக்கிறது அதை
அதன்போக்கில்
அதனை ரசிக்குமளவுக்கு
நிரம்பி வழிகிறது
அதன் மீதான அன்பு.

விவரிக்கவியலாத
பரவசம் என்கிறாள் அவள்

ஏதோ ஒன்றின் வலியினூடே
சந்தோஷித்து வாழ்கிறான் மனிதன்.

**வீ.உதயக்குமாரன்,**
**வீரன்வயல்.**

● காதலியின்
வருகையைத்
தடுத்துவிட்டதே என
மழையைக்
கோபித்தேன்.

நனைந்தபடி
வந்தாள்
என்
காதல் தேவதை.

ரசித்தேன்
மழையில் நனைந்த
காதலியையும்
மழையையும்.

பாரியன்பன், குடியாத்தம்.

● சுழல்கின்ற
பூமிக்குத்தெரியுமா
இது எத்தனையாவது யுகமென்று?

தவறாமல் உதிக்கின்ற
சூரியன் அறிந்திருக்குமா
விடியிலின் கணக்கை?

ஒளிரும் நட்சத்திரங்களின்
எண்ணிக்கையை
தெரிந்து வைத்திருக்குமா?
ராத்திரி வானம்.

தொட்டுச்செல்கிற
அலைகளின்
எண்ணிக்கையை
சொல்லுமா கரைகள்?

மண்ணிற்குத் தெரியுமா
மழைத்தூறல்களின்
கணக்கு?

இருக்கின்ற நீ
இப்பிரபஞ்சத்தின்
எத்தனையாவது மனிதனென்று
ரகசியத்தை உடைத்துச்
சொல்லமுடியுமா?

உண்மை
இது காலத்தின் மீட்சி
நிச்சயம்
நம்பத்தான் வேண்டும்.

உறுதிப்படுத்தலின் பொருட்டு
உன்னிலும் என்னிலும் கூட
அந்த
ஆதியுக
ஆதாம் ஏவாளின் ரத்தம்.

**வ.பி.எட்வின்,**
**திருநின்றவூர்.**

- வலது கையால்
இடது காதைத்
தொட்டபின் சேர்ந்த
ஆரம்பப்பள்ளி.

ஆரஞ்சு மிட்டாய்
கொடுத்தபின்
உட்காரக் கிடைத்த
பள்ளியின் முதல் நட்பு.

ஆசிரியர்
கைபிடித்து
எழுதப் பழகித்தந்த
உயிர் எழுத்துகள்.

புரிந்துகொள்ளாமல்
சண்டைப்போட்ட
பள்ளி நாட்கள்.

தாமதமாய் வந்ததால்
வகுப்பிற்கு வெளியே
போட்ட முழங்கால்

மழலை அன்பில்
காக்கா கடி
கடிச்சுத் தின்ன
கடலை மிட்டாய்.

அன்பிற்கினிய
அந்த நாட்களை...
மறக்க முடியுமா?...

வீ.சிவசங்கர்,
கள்ளக்குறிச்சி.

- சில நன்றிகளும்,
பல மன்னிப்புகளும்
கேட்கக்கூடாத இடத்தில் கேட்காமலும்
கேட்டுக்கொண்டும் நிற்கின்றன
தலையும் புரியாமல்;
காலும் புரியாமல்.

பொது அடையாளமாய்ப் போகுமென்றால்
தனி அடையாளமாய்த்
துருத்திக்கொண்டன
நன்றியும், மன்னிப்பும்
நிகழ்வுகளின் முன்னே...

செய்நன்றி மறத்தல் அல்லது
மறைத்தல்
பெரும்பாவம் தான்
என்ன செய்ய?

சிலபோழ்து
நன்றி செய்யாமல் விட்டபோது
மன்னிப்பிலிருந்துதான் தொடங்குகிறது
பெருவாழ்வு.

நன்றி கூறினாலும்; கூறாவிட்டாலும்
பெற்ற உதவியினை மறுக்கவியலாது
உற்ற தோழனாய்
உடன் வந்திடும்
புரிந்த உதவிக்கான
நிறைந்த ஆசீர்வாதங்கள்.
சிலநன்றிகளும் பல மன்னிப்புகளும்
வந்துவந்து போகும்
அல்லதாயின் வராமலே போகும்
ஆனாலும் கூட
இந்த வாழ்வு அப்படியே தானிருக்கும்
நன்றியும் மன்னிப்பும்
கைகுலுக்கிக் கொள்ளும் தருணங்கள்
தொடர்ந்தபடியே...

**க.ராமஜெயம்,**
**சத்துவாச்சாரி.**

● இருக்கலாம்
வேர்களின் மரங்களின் பேச்சுவலி
குறித்து.

செடிகளும் கொடிகளும்
சல்லாபிக்குமோ?
தண்டும் தண்ணீரும்
பற்றி.

பூவுக்கும் வண்டுக்கும்
மொழி
சங்கீதமாய்த்
தொடர

பாழும்
மனிதர்களுக்கிடையே மட்டும்
நீளும்
மௌனத்தின் நாவுகள்.

**அ.ஜெயக்குமார்,**
**இடைப்பாடி, சேலம்.**

- அனைத்தையும் துறக்க
ஆசைதான்.
ஆசையை?

இறப்பைவெல்ல
நினைத்தேன்.
பிறப்பை?

திசைகளை வீழ்த்த
எழுந்தேன்
சூரியனை?

பகையை மறக்கத்
துணிந்தேன்.
வடுக்களை?

வறுமையை ஒழிக்கத்
துடித்தேன்
உறக்கத்தை?

கடல்வற்ற
இறைத்தேன்.
நதியை?

காற்றில் கரைய
முயன்றேன்.
மூச்சை?

**கு.ராம்குமார்,**
வாடாமங்கலம்.

- பாத்திரங்கள் கழுவி...
பத்திரமாய் வளர்த்து
ஆளாக்கினாள் அம்மா...

படிக்காமல் இருந்தும்
பட்டபடிப்பு படிக்க
வைத்தார் அப்பா...

படிப்பைப் பாதியில்...
நிறுத்திவிட்டுக் குடும்பத்தைச்
சுமந்தான் தம்பி...

திருமண வயதைத்
தியாகம் செய்து
வேலையில் சேர்த்தாள் அக்கா...

பதினைந்து சவரனோடு
பந்தமாகி பத்தே நாளில்
தனிக்குடித்தனம் வைத்தாள் மனைவி...

**வசந்தராஜா**
நெய்வேலி.

● செதுக்கிய பெயரைச்
சுவைக்கிறது
மரங்கொத்தி

காலத்தின் நினைவாக
எஞ்சியிருக்கும்
ஒரே ஒரு
சுமைதாங்கிக் கல்மீதிருந்து
எங்கோ பார்த்த
சர்ப்பம் போன்ற
ஒற்றையடிப்பாதையைப்
பற்றி
யோசித்துக்
கொண்டிருந்ததோர்
கழுகு.

களைத்துப்போகும்வரை
உன் பெயர்
சொல்லிக்
கூப்பிட்டபடியிருந்தேன்
நான்.
இறுதிவரை
திரும்பவில்லை நீ.

இதோ
இந்தக்
காற்றுப்பெருவெளியில்
அலைந்து திரிகிறது
எனது குரல்.

**துரை. நந்தகுமார்,**
மாத்தூர்.

● கட்டுக்கடங்காத கூட்டம்
எல்லோர் கைகளிலும்
வியர்வை காயும்முன் வாங்கிய கூலி
வரிசையில் நிற்கிறது.

அதுவும் பட்டப்பகலில்
வெட்ட வெளியில்
மறைக்கவும் தோன்றவில்லை

வாங்கிவிட்ட மகிழ்ச்சி
எல்லோர் முகத்தில் வழிகிறது.
என்னால் மட்டும் ஏன் இன்னும்
வாங்கமுடியவில்லை.

சுற்றிச்சுற்றிப் பார்க்கிறேன்
அவர் போகட்டும், இவர் போகட்டும்
நேரம் போய்க்கொண்டிருக்கிறது.

ஒருவாறு சமாளிக்கிறேன்
கூர்க்கா சிரித்துக்கொண்டே
என்னைக் கடக்கிறான்.

நேற்று என்வீட்டில்
பழைய பேப்பர் வாங்கிய
பேப்பர்காரன் வாங்க சார் என
இதில் வரவேற்பு வேறு,

எலிபொந்து மாதிரி வளைவில்
தானாக நடுங்கிய கைகளைப்பார்த்துச்
சிரிக்கிறான் கடைக்காரன்.

ஈவு, மீதி தெரியாமல்
சமாளித்தபடி சாலைக்கு வந்தேன்
டாஸ்மாக் கடைக்கு
என்னைப் போகச் செய்த அம்மாவைத்
திட்டிக்கொண்டே நுழைந்தேன்
சமீபத்தில் பிரசவம் செய்த
என் மனைவிக்கான
பாட்டி வைத்தியத்திற்கு
பிராந்தி பாட்டிலோடு.

**சொ.சரவணபவா.**

● கட்டிட வேலைக்குப் போகையிலே
தொட்டில கட்டி போட்ட குழந்தை
கண்விழுச்சி இருக்குமோ
கண்ணிர் விட்டு அழுவுமோ.

பள்ளிக்குப்போன
பிள்ளைங்க ரெண்டும்
அள்ளி அணைக்க
அம்மா இன்றி
சுத்தி சுத்திப் பாக்குமோ
யாருகிட்ட போகுமோ.

சாரங்கட்டி
சாரங்கட்டி
உயர்ந்த கட்டிடம்
எங்க வாழ்க்கைப்போல
சரிஞ்சிப்போக
உள்ள சிக்கினோம்.

கனவுபோல
கட்டிவெச்ச
கற்களெல்லாம் கலைஞ்சது
அன்னாடங்காச்சி வாழ்க்கை
அந்தரத்தில் நிக்குது.

குடும்பம் என்ன ஆகுமோன்னு
நெஞ்சம் பதறுது
ஜல்லி கல்லு போலதான்
வாழ்க்கை சிதறுது.

இடிபாட்டில் நானிருக்கேன்
உசிர புடிச்சி வச்சிருக்கேன்
என்னோட கூக்குரலு
யாருக்கும் கேக்கலியே
உள்ளிருக்கும் என்னை யாரும்
இன்னுங்கூட பார்க்கலியே.

கூ.ரா.அம்மாசையப்பன்,
சேலம்.

● எல்லோரும்
எப்போதும்
எதற்காகவோ
காத்துக்கொண்டே இருக்கிறார்கள்...
பிள்ளைகளுக்காய்
பேருந்துக்காய்
காதலுக்காய்
அதிகாரிக்காய்,
அரசியல்வாதிக்காய்...

எண்ணற்ற காத்திருப்புகள்
இடையறாது
நிகழ்ந்தாலும்
நகரத்துச் சேரிகளிலும், சில
கிராமங்களிலும்
இருட்டுக்காகக்
காத்திருக்கிறார்கள்...

மறைவிடமாய் ஒதுங்க
இடம்தேடி ஒதுங்க
சில மக்கள்
இன்றளவும்...

இருப்புப்பாதைகளால் இந்தியாவை
இணைக்கிறோம்
தேசிய சாலைகளால்
தேசியத்தை இணைக்கிறோம்
இவர்களை மறந்து...

ஆரூர். **செ.கர்ணா.**

● மண் செழிக்கும்.

வறுமையின்றி
மனம் களிக்கும்.

வானளவு மாடிவரும்.

வானம்பார்க்கும் நிலம்யாவும் மாறிவிடும்.
தேர்போல ஊரு தேறிவிடும்.

ஓயாத கடல்போல
தேயாத உழைப்பிருந்தால்
தெய்வம் வந்தே
நல்ல சேதி சொல்லும்.

பூபாளம் வந்து
புதுகானம் பாடும்.
வேலையில்லா நாதியெல்லாம்
பாதியாகும்.

பாரதிசொன்ன கவிதைபோல
தமிழகம்
நாட்டுக்கு நல்ல சோதியாகும்.

விவசாயமின்றி வீழுகின்ற நேரத்தில்
வாழுகின்ற
மனிதர்நாம்
மாறிவிட்டால்...

**நீலமணி,**
பெரம்பூர்.

● மாடியில் இருந்தது உமாயூன் நூலகம்
வெளிச்ச உதவியில் படிக்க வசதி
நல்ல காற்று மூச்சிழுக்கவும் வசதி
களப்புலி மன்னவன் புத்தகப் புழு
இன்னும் இன்னும் அறிவு தேடினான்
எழுத்துப் பாதையில் பரியாய் ஓடினான்.
காகித மலர்களில் கண்வண்டு மேய்ந்தது.
ஆய்வு தொடர்ந்தான் சாய்வு நாற்காலியில்
இரண்டு அட்டைகளிடை அவன் உலகம்
நூலேணி ஏறிப் பரிதிகள் கொய்தான்
முன்னோர் தெளிபொருள் புதையல்கள் எடுத்தான்.
எல்லையில்லாதது வானமா, அறிவா?
மாந்தச் சிந்தனை தொடாததும் உளதா?
விழிகளால் செய்தான் வியப்பு அறுவடை
பார்வைகளை வட்டியாய் ஈட்டும்
வைப்பு நிதிதான் புத்தகம்
மைப்புட்டி பூதம் நசுங்கிய வற்றலாய்...
கருவூலம் என அவன் கருதியது நூலகம்
படித்துவிட்டு இறங்கினான் ஒருநாள்
படிகளில் இடறிச் சரிந்து விழுந்தான்
இறுதியாய் அவன் வைத்தது தப்படி
முடிவு அவனுக்கு வந்தது
வருவான் எனக் காத்திருந்தன நூல்கள்.

**நாகினி,**
**துபாய்.**

● தாளில் கிறுக்கும் கிறுக்கல்களை
ஆகா அருமை எனத்
தட்டிக் கொடுக்கத் தமக்கை இல்லை.

திட்டமாய் ஏற்றபடிப்பு ஏற்க
ஆலோசனை வழங்கி
அன்பாய் வழிநடத்த
அண்ணன் இல்லை.

உருட்டி விளையாடும் பொம்மைகள்
கார்களைப் பிடித்து இழுத்துப்பறிக்க
சண்டையிடத் தம்பி இல்லை.

பூச்சூடிய தலையைப் பிடித்திழுத்து
வலிதாங்காது
அழும் அழகை ரசிக்கத்
தங்கை இல்லை.

வீட்டுக்கொரு பிள்ளை
போதுமென்று நினைக்கும்
அப்பா அம்மா.

தோப்பாகா
தனிமரமாய் நிற்கும்
ஒரே பிள்ளையாய் நான்.

மதுரை. **க.சரவணன்.**

● இரவுகள் தோறும்
நிலவினைப் பற்றிய கதைகள்
சொல்லியபடியே இருக்கிறாள்
என் மனைவி
குழந்தைகளுக்காக.

நிலவில்
சூனியக்கிழவி இருப்பதாக
இதுவரை சொன்னதில்லை.
நிலவினை
நல்லபடியாகத்தான்
சொல்லிவைத்துள்ளாள்
நண்பனாகவே கருதுகிறார்கள்.

அமாவாசை இரவுகளில்
நிலவுகாணாத குழந்தைகள்
என்னை அழைக்கின்றனர்
உரையாடுவதற்கு.

இப்பொழுதெல்லாம்
அவளின் புண்ணியத்தில்
குழந்தைகளின் வாழ்வில்
நிலவாகிவிட்டேன்.

சூர்யநிலா, சேலம்.

● எங்கே கட்டி வைத்துள்ளாய்
எனக்கான சொற்களை
நோக்கும் போதெல்லாம்
மௌனங்களைத்தானே
அவிழ்த்து விடுகிறாய்.

ஏற்றி வைத்த அத்திரிகள்
சாம்பலாய் போயின
பற்ற வைத்தது நீயென்பதால்
அதையும் நெற்றியில் பூசினேன்.

வெறுப்பைக் கொட்டுகின்ற
உன் உதடுகளுக்கு
தெரிவதில்லை
நீ கண்களில் கட்டி வைத்துள்ள அன்பை.

மௌனமாகத் தான்
கடந்துப் போகிறாய்
உனக்குள்ளே கொந்தளித்து கிடக்கிறது
எனக்கான சொற்கள்.

உனது மனத் தடங்களில்
பயணிக்கும் போதெல்லாம்
சூடு பட்டுத்தவிக்கின்றன
எனது காதல் பாதங்கள்.

**அதங்கோடு. அனிஷ்குமார்.**

● இந்த மழையிருட்டில்
கருவேலங்காட்டிற்கிடையில்
பிறந்து சிலநாட்களேயான
நாய்க்குட்டியொன்று
கேவியழுகிறது.

இடிச்சத்தங்களுக் கிடையில்
அதன்குரல்
இடையிடையே வீசும்
காற்றோடு கரைகிறது.

யாருமற்ற தனிமையாக இருக்கலாம்
முதல் இடிமின்னல் மழையை
காணநேர்ந்த
பேரச்சமாகவும் இருக்கலாம்.

தன்அம்மாவை அழைத்து சலித்திருக்கலாம்
ஈரஇதயங்களை நோக்கிய
கருணை வேண்டியும் இருக்கலாம்.

தன்கேவல்களை
சிலநேரம் தனக்குள்ளும்
சிலநேரம் வெளியிலுமாய் உணர்த்தும்

ஆதரவற்ற ஜீவராசிகளுக்கு எதிராய்
கதவுகள் சாத்திதாழிட்டு
போர்வைகள் போர்த்தி படுக்கும்
ஜீவராசிகளுக்கு
மனிதர்கள் என்று பெயர்.

**நீச்சல்காரன்**

● ஒரு தொடர் மழைநாளில்
நகரமே கறுப்பு ரெயின் கோட்டுடன்
இயங்கிக் கொண்டிருந்தது
கவனிக்கத்தவறிய
மேகமும் கறுப்புச் சட்டையில்
இயங்கிக் கொண்டிருந்தது.

ஆர்.எம்.நுஸ்ரி, இலங்கை.

- நினைவுக்காய்
ஒரு
புகைப்படத்தை எடுத்து
வைத்திட
பணமில்லாது போனதால்
அன்று தொலைத்த
என்குழந்தை பருவத்தை
பதிவேற்றப்படும்
குழந்தை
புகைப்படங்களில்
இன்னும்
தேடுகிறேன்
என் பிஞ்சுமுகத்தை.

கண்ணாடிப்பெட்டி
பொம்மையில்
அழகாய் உடுத்தியிருந்த
உடையை
அதிக விலைகொடுத்து
வாங்கி
நான் உடுத்தி
கண்ணாடியில்
பார்க்கும்போது மட்டும்
கொஞ்சம்
அசிங்கமாகத்தான்
இருக்கிறது.

ஈரோடு. **சந்திரா மனோகரன்.**

- நடுநிசி உறக்கத்தைப்
பிரசவிக்கும்
என் தலையணையை
யாரோ அபகரித்து விட்டிருக்கிறார்கள்.
திருடிச் சென்றிருந்தால்
நண்பனுக்கு
என் தூக்கத்தைப் பரிசாக்கிய
தியாகியாயிருப்பேன்.

ஒரு கைப்பிடிக்குள் அடங்கும்
கருங்குருவியின் இறகை
சிதைப்பதுபோல் அதன் குடலை
உருவி எடுத்துவிட்டார்கள் பாவிகள்.

என் படுக்கையின் அமர்க்களமே
அதுதான்.

கையும்காலும் முளைத்த
குழந்தைகளின் அட்டகாசத்த்துக்கு
குயில்கூவும் வசந்தகாலம்
இன்னும் வரவில்லை.
அப்படியென்றால் யார் அந்தக்கள்வன்?
இன்றிரவு வந்தால் என்ன செய்வது
திகட்டாத கனவுகள்
இடம் பெயர்ந்துவிடுமே..
இருப்போரிடம் என் இழப்பைச் சொல்லியாயிற்று
செவ்வகப்படுக்கை
இழவு வீடுபோலாகிவிட்டது.
தன்னந்தனியாகத்
தலையணையற்ற படுக்கை
கைம்பெண்ணைப்போன்று
குரலற்று கிடக்கிறது.
அதனைத்தடவி
ஆறுதல் சொல்லிக்கொண்டிருக்கும்போது
அடையாளம் தெரியாத ஒருவர்
மூன்று குட்டித் தலையணைகளை
கிடத்திவிட்டுக் கடந்தார்கள்
வாழ்க தலையணையே! உனக்கு
சுகப்பிரசவமாம்..

பேராசிரியர். **சி.பழனி.**

- நான் மரமானால்
நன்றாகத் தலையாட்டுவேன்
தஞ்சாவூர்ப் பொம்மைபோல.

வேரையும் மண்ணையும்
பூக்களால் நான் அர்ச்சிப்பேன்.

கட்டுமரமாய் என்னைப் பயன்படுத்தியபின்
காயப்போடும் மீனவரைப் பார்த்து
நான் தலையாட்டுவதா?

சாலை மறியலுக்கு என்னை வெட்டியபின்
கன்றுநடுங்கள் என்போரைப் பார்த்து
நான் தலையாட்டுவதா?

குரங்குத்தொல்லை ஒருபக்கம்
கிளிகள் தொல்லை ஒருபக்கம்
வௌவால் தொல்லை ஒருபக்கம்
புயலின் தொல்லை ஒருபக்கம்
உங்களின் தொல்லை ஒருபக்கம்.

அடிமரத்தில் கறையான்கள்
நுனி மரத்தில் பச்சோந்திகள்
கிளைகளில் மரங்கொத்திகள்
பொந்துகளில் கரடிகள்
ஆடுகள்.. மாடுகள்
போதாக்குறைக்கு வேடர்கள்
எப்படி நான் மரமாவது?

நான் போதி மரமானால்
நீங்கள் புத்தர்களாக வேண்டும்
நான் சிலுவை மரமானால்
நீங்கள் இயேசுவாக மாறவேண்டும்
நான் ஈச்சமரமானால்
நீங்கள் நபிகளாக மாறவேண்டும்
நான் புல்லாங்குழலானால்
நீங்கள் சாரதியாக வேண்டும்
நான் வில்லாக மாறினால்
நீங்கள் இராமர்களாக மாறவேண்டும்
நான் அன்பு மரமானால்
நீங்கள்
மகாத்மாக்களாக மாறவேண்டும்.

**மு. முருகேஷ்,**
**வந்தவாசி.**

● கொத்துமல்லித் தழைகளை
ஆய்ந்தபடியே
சொல்கிறாள் ஆயா...
இத்துனூண்டு தழைக்கி
பத்து ரூபா கேக்கிறான்...
தெருவோரத்து
கருவேல மரங்களில்
கொடி படர்ந்து
காய்த்துத் தொங்கி,
அணில் கடித்துக் குதறும்
கொவ்வாக்காய்
கிலோ நாற்பது ரூபாயாம்.
அஞ்சு ரூபாய்க்கெல்லாம்
கீரைக்கட்டு கிடையாது
குடிப்பதற்கு
எந்தக் கடையிலும்
தண்ணீர் தருவதேயில்லை.
வாட்டர் பாக்கெட்
மூணு ரூபாய்
வாட்டர் பாட்டில்
இருபது ரூபாய்
நல்ல மழை பேஞ்சு
விளைஞ்சா,
நான் ஏன்
இம்புட்டு லோல் படறேன்...
நொந்து சொல்கிறான்
கிராமத்து சம்சாரி.
நகரம் செழித்தபடிதான்
இருக்கிறது...
கிராமத்தின் உயிரை
மெல்ல மெல்லக்
காவு வாங்கியபடி.

நன்றி : முகநூல்

**வண்ணதாசன்.**

● அன்றாடச் சமையலுக்கு
காய்கறி வாங்கிவருகிறவன்தான்
இந்தக்கவிதையின் முதல்வரியில் நுழைகிறான்.

முடிவெட்டும் கடைபெஞ்ச்சில்
இவனுடன் காத்திருந்த சிறுவனைப் பார்க்கிறான்
முற்றிலும் உரைநடையான இந்த வரியையே
கவிதையின் அடுத்தவரியென நம்புகிறான்.

ஆட்டோவிலிருந்து சீருடையோடு குதிக்கும்
முடிவெட்டின பையன்
காய்கறிப் பைக்காரனைப் பார்த்துச்
சிரிக்கும்போது அடுத்தவரி கீழே விழுகிறது.
கத்தரிக்கோல் சத்தத்துடன்.

புடலங்காய் எட்டிப்பார்க்கும் வலதுகையை
இடதுகைக்கு இவன் அவசரமாக மாற்றி
வேகமான உயரத்தில் கை அசைக்கிறான்
எத்தனாவதுவரி இது என்ற கவனம் இன்றி
பதில்கை அசைக்கும் குட்டிப்பயலுடன்
பள்ளிக்கூடக் கதவுக்குள் போய்விட்டதால்
எதிர்பாராமல் முடிந்த கவிதையின் கடைசிவரி
எந்தவகுப்பில் உட்காரும் என்று
பதற்றமாக இருந்தது முதல்வரிக்காரனுக்கு.

அருவி

## ஹைக்கூ வாசல்



**உங்களை வரவேற்கிறது**

'ஹைக்கூ' ஏதேனும் செய்தியைச் சொல்லாவிட்டாலும் பரவாயில்லை. அது ஒரு அனுபவத்தை சொல்லியாக வேண்டும்.

- **மாலன்.**

● யார் யாரோ
கடவுளாகிவிட்டனர் என்கிறார்
முன்னாள் கடவுள்.

- குகை. **மா.புகழேந்தி.**

● பனிமூடிய
பாற்கடலில் இல்லை
உப்பு.

- முனைவர். **எ.மு.ராஜன்,**
புதுச்சேரி.

● யாரோடு பேசுவது
புரியாமல் தவிக்கிறது
மௌனம்.

- **இரா.இராஜேஷ்குமார்,**
தர்மத்தூரணி.

● பழைய வீடு
புதுக்குடித்தனம்
குருவிகள்.

- **எஸ்.மைக்கேல்ஜீவநேசன்,**
சென்னை-87.

● வறண்ட குளக்கரை
இன்னுமிருக்கிறது
வலை.

- **இரா.பூபாலன்,** பொள்ளாச்சி.

● மனமில்லை
திரும்பிப் பார்க்கவைக்கிறது
அவளின் கொலுசு.

- **மு.குமரன்,** பண்ணந்தூர்.

முனைவர். **மித்ரா**

- வெளியூர் பயணம்
முடிந்தது அவசரத்தில்
கிளிகளின் ஞாபகம்.

சேற்றுவயலில்
சிலம்பு நடவுபார்த்து
சொல்லும் சோகம்.

சிரிக்கும் ரோஜா
சன்னலுக்கு வெளியே
வாசம் திருடும் காற்று.

சுட்டெரிக்கும் சூரியன்
கிடக்கும் நம்பிக்கையில் புற்கள்
நாளைவரும் மழை.

பறக்கும் எங்கெங்கோ
ஓய்வெடுக்கும் மனக்கூட்டில்
கனவுப்பறவை.

மரநிழலில்
கிடக்கும் இலை தடுக்கையில்
தூங்கும் காற்று.

நாளை புயல்
இன்றே வாழ்ந்து பார்க்கும்
ஆற்றங்கரையில் மரம்.

வீட்டில் வறுமை
தூங்கும் பசியோடு
பூனை.

நனையும் மழையில்
சண்டையிடும் போர்வீரர்களாய்
கோழிகள்.

**அமுதபாரதி,** சென்னை.

● கொஞ்சம் பொறுங்கள்
பிறகு கழுவலாம்
கோப்பைக்குள் எறும்பு.

பூச்சிகளின் வீடாகிவிட்டது
மயானத்தில்
மண்டை ஓடு.

எவ்வளவு உயர்ந்தாலும்
கடல்விட்டுப் பிரிவதில்லை
அலைகள்.

திக்கித் திணறி
மேலேறிய காற்றாடி
வாலாட்டுகிறது.

பிச்சை எடுத்தாலும்
எத்துணை கம்பீரம்
யானைக்கு.

குட்டுவதுபோல் இருக்கிறது
நடந்து செல்கையில்
தலையில் விழுந்த சருகு.

தூக்கக் கலக்கத்தில்
கடைக்காரன்
தொட்டெழுப்பும் ஈ.

காத்திருந்தேன்
போய்விட்டது
இளமை.

பாராட்டுகள் : *30.3.2014* ஞாயிறு அன்று **'அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கம்'** நிகழ்த்திய 'ஹைக்கூ திருவிழாவில்', ஓவியக்கவிஞர் அமுதபாரதி அவர்களுக்கு **'வாழ்நாள் சாதனையாளர் விருது'** வழங்கிச் சிறப்பிக்கப்பெற்றது.

குடந்தை. **பானு,**
**சென்னை.**

● கோடை விடுமுறை
இலை உதிர்க்கும்
பூ மரங்கள்.

புல்லாங்குழல் இல்லாமல்
நாத இன்பம்
தொட்டிலில் மழலை.

இமைகளைத் திறந்தாள்
உதயமாயிற்று
மலர்க்கண்காட்சி.

எங்கும் இரத்தச் சிதறல்
வண்ணமயமாய்
அந்திவானம்.

**கி.சார்லஸ்,**
**நாகப்பட்டிணம்.**

● பரணில் புல்லாங்குழல்
வாசிக்க எடுத்தேன்
குளவிக்கூடு.

மழைசப்தம் ரசிக்கிறாள்
முதன்முதலாய்
குடைபிடிக்கும் சிறுமி.

மழைச்சாலை
மின்னலில் தெரிந்தது
இறந்த பூனை.

ஈரமேடையில்
விரல்களில் பரதநாட்டியம்
கோலம்.

மெல்ல எழுதலாம்
வலிக்கப்போகிறது
குழந்தைக்கான கவிதைக்கு.

மழைதான்
மழையாக இருப்பதில்லை
நனையாத குழந்தைக்கு.

அவசர உலகம்
இன்றே வருகிறது
நாளைய பிறந்தநாள்.

தாமதமான இரவு
கிடைக்காமல் போனது
குழந்தையின் முத்தம்.

பட்டியூர். **செந்தில்குமார்,**
**துபாய்.**

● தெருவெங்கும்
கரும்புச்சக்கைகள்
மகிழ்ச்சியாய் எறும்புகள்.

பேரீச்சம் பழவியாபாரியின்
கோணிப்பையில் இருந்தது
பள்ளிக்கூடப்புத்தகம்.

உலை கொதிப்பதை
சப்தமிட்டு உணர்த்தியது
விழுந்த மூடி.

அடிக்கடி மின்வெட்டு
காற்றோட்டமாய் இருந்தது
மரத்தடிப் பள்ளிக்கூடம்.

**வீ.தங்கராஜ்,**
காஞ்சிபுரம்.

● வேர்க்காமல் கறுக்காமல்
வெயிலில் அலைகிறது
வெண்முகில்.

தூரிகை இல்லாமல்
வானில் ஓவியங்கள்
காற்றின் கைவண்ணம்.

பழையகூடாரம்
பல்லாயிரம் ஓட்டைகள்
இரவு வானம்.

உதிர்ந்தது இலை
சலனமின்றி மரம்
குளத்தில் அலை.

மொழி பெயர்ப்பின்றி
பன்மொழிக் கவியரங்கம்
ஆலமரத்தில் பறவைகள்.

மீனுக்கு இரையாகாமல்
மிதக்கிறது அப்பம்
குளத்தில் நிலா.

புல்லிதழில் பனித்துளி
அண்டம் அளக்கும்
வாமன வடிவம்.

பேராசிரியர். **க.சங்கர்,**
அரியலூர்.

- இறந்தபின் எடுத்த
  பாட்டியின் புகைப்படம்
  உயிரோடிருக்கிறது அன்பு.

  துணிகாயும்போதும்
  சொல்லுகிறார்கள்
  மொட்டைமாடி என்று.

  அடுக்கிக்கிடக்கும்
  புத்தகங்கள்
  அருமை உணரா மக்கள்.

  கீழே விழுந்தும்
  வாழ்வளிக்கிறது
  மழைத்துளி.

  பயணங்களின் ஓரத்து இருக்கை
  கண்டு ரசிக்கலாம்
  குழந்தைகளின் கையசைப்பை.

இரா.இரவி,
மதுரை.

● ரசிப்பவர்களும் உண்டு
உண்பவர்களும் உண்டு
ரோஜா.

தாத்தாவோடு சேர்ந்து
ஓய்வெடுத்தது
குடை.

கொக்கிடமிருந்து தப்பி
வலையில் விழுந்தது
மீன்.

மறந்திட்டன
சிறகுகள் இருப்பதை
கூண்டுக்கிளிகள்.

உண்மை
உண்மையைத்தவிர வேறில்லை
கண்ணாடி.

மரணித்தன
மலர்கள்
மலர்வளையம்.

வரப்புச் சண்டை
வெட்டுப்பட்டது
வரப்பு.

**வைகறை,** பெரும்பாலை.

● காற்றில் மூடும் சன்னல்
ஒவ்வொரு முறையும் திறக்கிறது
இன்னொரு வானத்தை.

நனையாமல் நுழைந்தார்கள்
மடக்கிய குடையில்
சொட்டும் மழை.

பிரதிபலிக்கிறது
அமர நெருங்கும் தும்பியை
பனித்துளி.

சிறகடிக்கும் வண்ணத்துப்பூச்சி
கடக்கும் முள்மரத்தில்
தலைக்கீழாய்ப் பட்டம்.

கல்லறை அருகே
அழியாமல்
யாரோ படுத்திருந்த தடம்

நீரற்ற கிணற்றைத் துளைத்து
எட்டிப் பார்க்கிறது
ஏதோவொரு நுனிவேர்.

அறுவடைமுடிந்த வயல்
காலொடிந்தபடி
காவல்பொம்மை நிழல்.

பசித்திருப்பவன் விழிகளில்
பிரகாசமாய்த் தெரிகிறது
நள்ளிரவு தெருவிளக்கு.

**சந்திராபெருமாள்,**
கும்பகோணம்.

- சாப்பிடாமல் பொம்மை
தனக்கும் வேண்டாம் எனக்
குழந்தை.

கரையேறிய பின்புதான் தெரிந்தது
கரையேற்றியவனுக்கு
கண்ணில்லை என்பது.

பசிக்காதிருக்க மருந்து
பசிப்பதற்கு மருந்து
மருந்துக் கடையில்.

பஞ்சுமெத்தையில் நாய்
வாசல் திண்ணையில்
தாய்.

வீட்டில் அப்பா
இல்லையென்று சொல்ல உத்திரவு
குழப்பத்தில் சிறுவன்.

இருவீட்டாரும் சண்டை
ஒற்றுமையாய்
குழந்தைகள் விளையாடியபடி.

**ஆரிசன்,**
**கீழ்க்கொடுங்காலூர்.**

● வீட்டு அழகை
வீதிசிரிக்கப் பேசியது
மது.

கரையைக் கடக்காமல்
சூறையாடியது
ஊழல்.

அம்புகள் குறிபார்த்தன
இலக்குநோக்கிப் பயணம்
கண்கள்.

மழையின்றி
நனைந்தது
பனி.

**அருணாச்சலசிவா.**

● தூங்கவே இல்லை
தூங்குமூஞ்சி மரம்
முறிந்தகிளை.

கோவிலுக்குப் போவதாய்க் கனவு
உள்ளே விடவில்லை
விழிப்பு.

அம்மா கொடுத்த
கடைசி காசு
அவள் நெற்றிப் பொட்டில்.

வெறிச்சோடிக்கிடக்கிறது
திருவிழாவில்
ரெண்டுபட்டதால் கோவில்.

கடவுளுக்குப் பணவிடை
அனுப்பியவன் எழுதினா.ன்
அம்மா நலமா?

**செண்பக ஜெகதீசன்**

- தாய்க்கு அது தேவகானம்
தப்பாய்ப்பாடினாலும்
குழந்தை.

சுழித்துச் செல்லும்
நதிக்கு தெரிந்திருக்கிறது
நாணலின் மொழி.

கண்டுபிடிக்கமுடியவில்லை
உயிரோடு இருக்கும்வரை
இருளைத்தேடும் ஒளி.

குழாயடியில் ஊர்வம்பு
பெருமூச்சு விட்டபடி
குழாய்.

பூப்பறிப்பவன் விடுமுறையில்
பூக்களெல்லாம்
புன்சிரிப்பில்.

அம்மாசேலை இரண்டானது
ஏழைப்பெண்
வயதுக்குவந்தாள்.

**மு. ஆறுமுகம்,**
மலேஷியா.

● தொடருது கண்ணாமூச்சி
காலையில் தேடுது குழந்தை
குடத்தினுள் நிலவை.

அகதிகள் முகம்
முள்வேலியில் பனித்துளிகள்
சில சிவப்பாய்.

வானவில்லில்
பனிரெண்டு வண்ணங்கள்
குழந்தை வரைந்தது.

**மா. கார்த்திகேயன்,**
கழுகுமலை.

● சாலையில் குறுக்கே
வேகமாய் ஓடுகிறது
உதிர்ந்த இறகு.

சருகுகளின் சப்தத்தில்
மறைக்கப்பட்டது
ஒரு மௌனம்.

இடப்பிரச்சினை
இல்லை
வேர்களுக்கு.

பணி ஓய்வில்லை
எப்போதும் உழைத்தபடி
எறும்புகள்.

**உமையவன்,**
**திருவான்மியூர்.**

- தாயாகிப்போன குழந்தை
தாலாட்டுப் பாடுகிறது
பொம்மைகளுக்கு.

உணவில்லை
பசியாறிய ஏழை
கனவு.

கொள்ளை அழகு
கொள்ளை போனது
திராவக வீச்சு.

யாருமில்லா நூலகம்
நிரம்பிவழிகிறது
மதுபானக்கடை.

**ச.கோபிநாத்,**
**சேலம்.**

- வெடித்துச் சிதறும்
சோப்புக்குமிழ்
உடைந்தது குழந்தைமனம்.

நிலம் பார்க்கும்புல்
ஏணியாய்
மேலே ஏறும் புழு.

கதிரறுக்கும் ஓசை
தாலாட்டியது
தொட்டிலில் உறங்கும் குழந்தை.

மண்ணில் படரும்
யானையின் நிழல்
ஓய்வெடுக்கும் பாகன்.

**கு. ராம்குமார்,**
**வாடாமங்கலம்.**

- பாதுகாப்பில்
காக்கும் கடவுளின்
உண்டியல்.

விதவை வைத்தாள்
பூவும் பொட்டும்
கணவர் படத்திற்கு.

படுத்துக்கொண்டது
தொழில்
புலம்பும் வியாபாரி.

தெருவில் எரியும்
விளக்கு
நெருங்கும் தேர்தல்.

விளையும் வயலில்
விளைச்சல்
அடுக்குமாடிகள்.

புதுயுகா,
பண்ணந்தூர், கிருஷ்ணகிரி.

- கறந்தவரை லாபம்
தரகனுக்கு
சந்தையில் மாடு.

நகர்ந்தது பேருந்து
நின்றயிடத்திலேயே நிற்கிறது
காதலும் கண்களும்.

தள்ளாடுகிறது குடும்பம்
தினமும் போதையில்
குடும்பத் தலைவன்.

கிழிபடுகிறது
காலத்தின் முள்ளில்
மனசாட்சி.

இதயமே இல்லை
காது, மூக்கு
தொண்டை மருத்துவர்க்கு.

**ஆ.ச.மாரியப்பன்,**
புதுக்கோட்டை-1.

● பவள விரிப்பில்
ஒருவரிக் கவிதை
புன்னகை.

நீரில்லை
வற்றிப்போனது
உழவர் வாழ்க்கை.

வற்றிக்கிடந்தன
சிறிய குட்டைகள்
சாலைப்பள்ளம்.

உள்ளம் மறுத்தது
உயர்வை
விலைவாசி.

தொலைந்தது உதட்டில்
புன்னகை
முதிர்கன்னி.

ப.கஜேந்திரன்,
சென்னை-44.

● படர்ந்த கொடியில்
ஓசை
வடியும் தூரல்.

குளிர்ந்த காற்றில்
என்ன பேச்சு?
கலைந்த கூந்தல்.

காதல்தோல்வியோ
இலையில் உருளும்
நீர்த்துளி.

வாழ்வே பூதான்
படுக்கையிலும்
படத்திலும்.

யாரை நனைத்திட
இறங்குகிறது கீழே
பனித்துளி.

மு.ஜெயலட்சுமி,
குரோம்பேட்டை.

● கோணல் மாணலாகவே
குழந்தைக்கு
திருஷ்டிப்பொட்டு.

கைகளை மாற்றுகிறான்
குயவன்
மண்கூஜா.

இதமாக இருந்தது
தழுவிவந்தது
ஈரக்காற்று.

நடத்திக்கொண்டிருந்தது
தன்னாட்சியை
அமாவாசையன்று இரவு.

**ம.ரமேஷ்,**
**முத்துக்குமரன்மலை.**

● ஒலிக்கிறது சுருதிசுத்தமாய்
ஒட்டடை பிடித்திருக்கும்
கோவில் மணி.

பயமுறுத்தக் காட்டினேன்
அய்யனார் அரிவாளை
பிடுங்கி விளையாடியது குழந்தை.

கண்வழி புகுகின்றன ஈக்கள்
அமைதியாய்
காவல் பொம்மை.

ஈச்சமரத்திலிருந்து விழுகின்றன
யாரோ எப்போதோ
எறிந்த கற்கள்.

மார்கழிப்பனி
நடுநடுங்கி ஒலிக்கிறது
கிறல் விழுந்த திருப்பாவை.

**அரவிந்தன்,**
**பாலக்கரை.**

● போக்குவரத்து நெரிசலில்
சிக்கிக்கொண்டது
சாலையோர ஓவியம்.

பூக்கள் விற்கவில்லை
வாடியது
வியாபாரி மனசு.

கொளுத்தும் போதுதான்
பிறப்பும் இறப்பும்
தீக்குச்சியின் புலம்பல்.

உள்ளே அழுகை
வெளியே சிரிப்பு
தாய்க்கு சுகப்பிரசவம்.

**மு.கோபிசரபோஜி,**
**இராமநாதபுரம்.**

● இருப்பிடம் மாறி
பயணிக்கிறது செருப்பு
மேல்சாதிக்காரன் தெரு.

பழைய நினைவுகளோடு
அப்பா
வெளிநாட்டு வாழ்க்கை.

நடைபயிற்சிக்கு
தயாரானது நாயும்
நகரத்து வாழ்க்கை.

நிலம் நான்கும்
பாலையானது
வனங்களோடு யுத்தம்.

ஹிஷாலி,
வேளச்சேரி, சென்னை.

● சாலையற்ற சோலை
அணிவகுக்கும்
எறும்புகள்.

பூ ஒன்று
புன்னகை பலவிதம்
வாழ்க்கைத் தோட்டம்.

வறுமையின் நிறம் சிவப்பு
உணர்த்தியது
கீழ்வானம்.

**சு.கேசவன்,**
**தொண்டையூர்.**

● முயல்கிறது
உச்சியைத் தொட
படரும் கொடி.

யாருமற்ற இரவு
துணைக்கு வந்தது
சன்னலருகே நிலா.

ஆடும் தொட்டில்கள்
தாலாட்டுப்பாடும்
கோவில்மரத்தில் குருவிகள்.

படிக்கும் மாணவர்கள்
ஒரே இரைச்சல்
பள்ளி அருகே மதுக்கடை.

வரும் வசந்தம்
அமைதியுடன் காத்திருக்கும்
இலையுதிர்ந்த மரம்.

இருண்ட வாழ்வு
விடியல்ராகம் பாடும்
பார்வையற்றவனின் புல்லாங்குழல்.

கண்ணாடிச் சிறை
பெருமூச்சுவிடும்
அலங்கார பொம்மைகள்.

புதுவைத்தமிழ்நெஞ்சன்.

● எதிரும் புதிருமாய்
இளைய தலைமுறை
சிவப்பதென்று?

பூமுகம் காட்டும்
நிலா முகம்
அரும்பின் புன்னகை.

மடி சுமந்தவள்
சுமக்கிறாள் முதுகில்
எதுவும் சுமையல்ல.

மனதுக்குள்
பொழிகிறது மழை
விழிஈர்ப்பு விசை.

அணிவகுத்து நிற்கும்
வரப்பில் கொக்குகள்
இலக்கு ஒன்றுதான்.

முள்வேலிமீறி
முகம் காட்டும்
பரிதிஒளி.

ஓமலூர். **பாலு.**

● காற்றைக் கோபித்தன
விழுகின்ற சருகுகள்
வரிசையாய் எறும்புகள் பயணம்.

கொத்தாய்க் குடைபிடித்தன
இலைகள்
பூக்களைப் பரிசளித்த வேர்களுக்கு.

நிறைய பதில்கள் கிடைத்தன
பெரியவர்களுக்கு
குழந்தைகளின் ஆர்வக்கேள்விகள்.

**வெற்றிப்பேரொளி,**
திருக்குவளை.

● பித்த வெடிப்பல்ல
வாய்க்கால்களில்
வறட்சி.

ஒழுகும் வீடு
மகிழும் விவசாயி
வயலில் நிறைகிறது நீர்.

உழுதவன்
ஓய்வெடுக்கிறான்
டிராக்டர் நிழல்.

முற்றிய கதிர்களின் நடுவில்
குஞ்சுகள் சத்தம்
காடைக்கூடு.

**தனலெட்சுமி பாஸ்கரன்,**
**திருச்சி..**

● வெறுப்பாய்ப் பார்க்கிறது
குழந்தை
அழும்போது சிரிக்கும் பொம்மை.

கொலுசு பூட்டிய இருநாற்றுகள்
நடவு செய்யும் வயலில்
அவளின் கால்கள்.

தூண்டில் விழும்போதெல்லாம்
நடுங்குகிறது
குளத்து நிலா.

வளைந்துசெல்லும் ரயிலை
வேகமாய்க் கடக்கின்றன
ஊர்கள்.

பாதுகாப்பு வாரவிழா
குத்துவிளக்கில்
ஜெலட்டின் திரி.

**இரா.தயாளன்,**
**திருவாய்நல்லூர்.**

● பனிக்காலம்
மரம் முழுவதும் போர்த்திவிட்டது
படர்ந்தகொடி.

பட்ட மரத்திலிருந்து
உதிர்ந்து விழுகிறது
மழைத்துளி.

துரத்தித் துரத்திச் சண்டையிடுகிறது
நாய்க்குட்டி
அருகில் பறக்கும் தும்பிகளை.

புதிதாகத் தெரிகிறது
எப்போதும் ஊர்
மஞ்சள் வெயிலில்.

மழைவிழும் சப்தம்
தூரத்து மரம்
இலையுதிர்வு.

வலங்கைமான்நூர்தீன்,
திருவாரூர்.

● வலிக்கிறது யானைக்கு
தன்மேல் அமர்த்திய
குழந்தையின் அழுகை.

பிணக்குவியலுடன் பயமில்லை
சவக்கிடங்கில் நானும்
அனாதைப் பிணம்தான்.

கடைசியாய் அழுதது
கொஞ்சநேரம் வானம்
மிச்சமாய் ஒருமரம்.

தேங்கிய மழைநீரில்
தேடுகிறான் சிறுவன்
கதையில் கேட்ட விண்மீன்கள்.

அறுவடை முடிந்து
மாட்டுவண்டியில் நிரம்பியிருந்தது
வெறுமை.

மரத்தைவெட்டிக் கட்டிய வீட்டில்
அசரீரியாய்
பறவைகள் சப்தம்.

**எஸ்.பூபாலன்,**
திருவாய்நல்லூர்.

- இறுதி ஊர்வலம்
குறுக்கே செல்லும்
பூனை.

எப்போதும் புன்சிரிப்போடு
கடவுள்
திருவிழாவில் கலவரம்.

கடந்துபோகும் எல்லோரையும்
அழைக்கிறது
தலையாட்டி பொம்மை.

தாத்தாவின் மரணம்
அழ முடியவில்லை
ஊன்றுகோல்.

வேகமாகத் துரத்துகிறது
காற்று
காய்ந்த சருகுகளை.

திருச்சி. அ.கௌதமன்,
மடிப்பாக்கம்.

● விடுதலைவேண்டி
கூக்குரலாய் இருக்கலாம்
கூண்டுப்பறவை.

நடுநிசிவேளை
கடிகார ஓசை
எட்டாதொலைவில் மனசு.

அடிக்காத காற்று
அசையா இலைகள்
மறையும் கதிரவன்.

உருக்கிய தங்கம்
வழிந்தோடுகிறது
அந்திவானம்.

அடுக்கடுக்காய் சோகம்
அடுக்கியது
இடியும் அடுக்குமாடிகள்.

ஆர்.கம்பம்.ரவி,

● மூடப்படாத ஆழ்துளை கிணறு
பயமின்றி விளையாடும்
விவசாய குழந்தை.

தோப்பு மரங்களில்
காலை மாலை கச்சேரி
பறவைகளில் சங்கீதம்.

வறண்ட குளத்தில்
ஆதரவாய் நிற்கிறது
குருட்டு கொக்கு.

நல்லகாலம் பிறக்குமா?
நள்ளிரவில் வந்துபோகிற
குடுகுடுப்பைகாரனுக்கு.

வீட்டுச்சுவரை பெயர்க்கிறது
விருட்சமாகும்
ஆலம் விதை.

அதிவேகப் பயணம்
எங்கே செல்கிறது
வாழ்க்கை.

பிள்ளைவரம் வேண்டி
கல்தொட்டில் சுமக்கிறது
கோவிலில் பூப்பூத்த மரம்.

யாரும் அமரமுடியவில்லை
திண்ணைகளற்று
மனித மனங்கள்.

**கண்ணன்சேகர்,**
**திமிரி.**

- நிறுத்தம் தாண்டி பேருந்து
ஓடமுடியாமல்
செயற்கைக்கால் சிறுவன்.

மரம் நடும்விழா
நன்றிகலந்த குரலில்
தூரத்து குயிலோசை.

வார்த்தையில்லா கவிதை
கேட்டுக்கொண்டே இருக்கலாம்
நதியின் சலசலப்பு.

அளந்து பாக்காமல்
சேகரித்த குச்சிகள்
அழகான பறவைக்கூடு.

பலநாள் சேமிப்பு
ஒரே நாளில் கொள்ளை
தேனெடுப்பு.

தரிக்கும் அனல்காற்று
நினைவில்
வெட்டிய மரம்.

**ந.க.துறைவன்,**
சத்துவாச்சாரி.

- நதியில் நீர்ப்பெருக்கு
பாய்ந்து கடக்கும்
பாலத்தை ரயில்.

பாதையில் மனிதர்கள்
மனம் நிறைய
குப்பைகள்.

சிறகுவிரித்து பறக்கும்
கள்ளமில்லா பறவைகள்
சிறுவர்கள்.

**அமரன்**

● நினைவலைகள் சுகமாய்
மனங்கனத்துச் சோகமாய்... நட்பு
மீட்டெடுக்கும் சுயசரிதை.

இரவுகளும் விலக்கலவோ
இங்கிருந்து ஏகுவதும்... எங்கிருந்தோ
வருவதுமாய்... மன ஊர்தியும்.

ஒளிப்பகலில் பறப்பதேபோல்
மழையிரவில் முடங்குவதும்... சிறகினம்
மறப்பதிலை மனிதகணம்.

வழியெலாம் காடுகள்
வண்ணமயம் பூமரங்கள்... நன்றி
பறவைகள் நம்சிநேகம்.

கடலலைகள் ஓய்வதிலை
கரும்பாறை முட்டிமோதி என்னென்
கடைந்தனவோ, ஒளித்துளிகள்.

கட்டடங்கள் உயிர்ப்பதுண்டு
சாளரங்கள் திறந்துவிடில் நிலவினொளி
கூடலில்தான் இதயமொழி.

அலைக்கூட்டம் கனக்குமெனில்
நிழல்வெளி மூச்சுமுட்டும்... இலேசாக்க
நிலத்திறங்கும் காற்றுவெளி.

# □ : வந்து சேர்ந்தன : □

## ● இதழ்கள்

- கருக்கல் விடியும்
- கல்வெட்டுபேசுகிறது.
- மகாகவி
- பாவையர்மலர்
- பாடைப்பாளர்களின் குரல்
- செங்காந்தள்
- ஆலம்பொழில்
- பயணம்
- தமிழ்த்தாராமதி
- கவி ஓவியா
- சங்கு
- வளரி
- அறிவின் வழி
- பொதிகை மின்னல்
- மின்னல் தமிழ்ப்பணி
- ஆனந்த ஜோதி
- தமிழர் முழக்கம்
- புதுவை. வானம்பாடி
- ஏழைதாசன்
- நம்பிக்கைவாசல்
- வெற்றிமுனை
- மீட்சி
- மின்மினி
- புதுகைத்தென்றல்
- சிரிப்புரோஜா
- திருஅசுபதி
- புதுவைப்பரணி
- வளசரவாக்கம் செய்திமடல்
- உயிரோசை
- நீலநிலா
- நுகர்வோர் நண்பன்

---

**கவிப்பேராசான் மீரா விருதுகள் 2014**

## ● அறிவிப்பு:

□ செப்டம்பர் 2013க்குப்பிறகு தமது முதல் கவிதைத் தொகுப்பினை வெளியிட்டுள்ள கவிஞர்கள் நூலின் மூன்று பிரதிகளுடன் இது தங்களின் 'முதல் கவிதைத் தொகுப்பு' எனும் உறுதிமொழிக் கடிதமும் இணைத்து 30.8.2014க்குள் வளரி கவிதை இதழ் வழங்கும் **கவிப்பேராசான் மீரா விருதுகள் 2014க்கு** அனுப்புக.

தொடர்புகொள்ள : 97893 21823

முகவரி : வளரி, மீரா விருதுகள் 2014
32, கீழரதவீதி, மானாமதுரை 630 606.
சிவகங்கை மாவட்டம்.

---

## ● இரங்கல்:



தோற்றம் : 5.8.1941
மறைவு : 1.6.2014



'அருவி' இதழின் இணை ஆசிரியர் திருமதி. நா.புவனேஸ்வரி அவர்களின் தாயாரும், எமது மாமியாருமான திருமதி. T.V.ரேணுகாம்பாள் அவர்களின் மறைவுக்கு 'அருவி' ஆழ்ந்த இரங்கலையும், அஞ்சலியையும் செலுத்துகிறது.

பிரிவினைத் தாங்காது என்றும் நன்றி மலர்களை காணிக்கையாக்குகிறேன்.

– ஆசிரியர்.

## ✉ கடிதங்கள் ✉



ஹைக்கூவில் ஒரு வரலாறு படைத்த எனதருமை, ஐம்பதாண்டு கால நண்பர் அமுதபாரதியின் ஹைக்கூ அனைத்தும் அருமை. அவர் ஹைக்கூ அந்தாதியே படைத்தவர். அமரர். சுரதாவை அன்றி வேறு யாராலும் ஒரு நல்ல விளக்கத்தை, ஹைக்கூவைப் பற்றித் தரமுடியாது. 'அருவி' இதழ் பாதுகாத்து வைத்து மீண்டும், மீண்டும் படித்து மகிழவேண்டிய ஒரு நிகரற்ற இலக்கிய இதழ். மாறுபட்ட ஓர் இதழ்.

- தி.குமாரராஜா, உடுமலைப்பேட்டை.



சிற்றிதழுலகில் கவிதைக்கென இம்மாதிரியான அச்சு நேர்த்தியுடன், அழகான கட்டமைப்பில், கருத்தாழமிக்க கவிதைகளை உள்ளடக்கி ஓரிதழ் வந்திருக்குமா? என்று யோசிக்கவைத்திருக்கிறது 'அருவி'.

- நவீன்குமார், நடுவிக்கோட்டை.

 அருவி இதழ் 20 அழகாக வடிவமைக்கப்பட்டுள்ளது. ஐக்கூ கவிதைகள் அனைத்தும் ஆழமாகவும், பொருட்செறிவோடும் படைக்கப்பட்டுள்ளன. இதழ் தயாரிப்பில் தாங்கள் கொண்டுள்ள ஈடுபாட்டை ஒவ்வொரு பக்கமும் புலப்படுத்துகிறது. சுஜாதா, பிரபஞ்சன், ஈரோடு தமிழன்பன், தமிழ்நாடன் ஆகியோருடைய ஐக்கூ பற்றிய குறிப்புகள் புதிய வாசிப்பு அனுபவத்தைத் தருகின்றன. ஐக்கூக் கவிதைகளில் இடம்பெற்றுள்ள பௌத்தத்தொன்மம், (அமுதபாரதி, ப17) சைவத் தொன்மம் (நீலமணி ப26), கிறித்துவத் தொன்மம் (வசந்தராஜா ப66) போன்றவைகள் புதிய படிநிலை வளர்ச்சியைச் சுட்டுகின்றன. வீழ்ந்த சருகுகள் (ப18), குதித்தது தவளை (ப48), நெல் விற்ற இரவு (ப61), காதல் பொம்மை (ப112) போன்ற கவிதைகளில் சப்பானிய கவிதைகளின் தாக்கம் காணப்படுகின்றது. தங்களின் இதழ்ப்பணி மேலும் மேலும் சிறக்க வாழ்த்துகிறேன்.

– முனைவர். சு.இந்திரசித்து, உடுமலைப்பேட்டை.

 கவிதை என்பது சுவையும் பயனும் உடையதாக அமைதலே இன்பம் பயக்கும் என இயம்புவர் சான்றோர். சுவை என்பது எண்ணத்தின் ஆர்வத்தை, அவாவைப் பொறுத்தது என்றால், பயன் என்பது சமுதாய அக்கறையும் அதற்கான உழைப்பை வழங்குகின்ற உரமும் இன்னதெனக்காட்டும் இயல்புடையது எனலாம்.

சன – மார்ச்சு 14 காலாண்டு அருவி இதழில், அழகியலைக் காணும் வியப்பு, வெளிச்சமில்லாத வாழ்க்கையின் அவலம், ஏதிலியராய் உள்ள குழந்தைகள் கவனிப்பார் இல்லாத நிலையில் ஏற்படும், பரிவுணர்வு, ஒன்றைத் தந்து இன்னொன்று இலவசம் என்னும் வணிக மோசடி, அடிப்படை வசதியே இல்லாத மருத்துவமனை, உழைத்து ஊருக்குப் பயன்படுபவனின் பசி, துன்பம் எதுவரினும் துவளாமல் இருந்து கடமை ஆற்றும் ஒருவன், விதவையான ஒருத்தியை பெண் என்றும் நினைத்துப் பார்க்காத ஈரமற்றோர் அவள் இறந்தபோது, இறுதி ஊர்வலத்தில் பூக்களைத் தூவி தம் புன்மையை மறைக்கும் கொடுமை ஆகியவற்றை எடுத்துக்காட்டி அருவியைக் குளிர வைத்திருக்கிறார்கள். (விட்டுப் பிரிந்த குழந்தை தாயைத் தேடுவதைப்போல) –காற்றில் உதிர்ந்த இறகு தன் தாயகம் தேடுகிறது என்ற சொற்களில், சிறகு – பல இறகுகள் சேர்ந்தது இறகு – ஒற்றையானது என்று விளக்கம் காட்ட, சிறகில் பிரிந்த இறகு என்று வரையும் கவிதை இனிக்கிறது. அதைத் தந்த பேரா. திரு.இரா.சோதிவாணன் அவர்களுக்கு நன்றி. ஒரு தாய் தன் குழந்தையைத் தழுவிக் கொஞ்சும்போது, அவள் மனத்தில் தோன்றும் ஆசைகள், கனவுகள், விரிந்த வானத்தையும் சிறியதாக்கி விடுகின்றன எனும்போது, தாய்மையின் உணர்வை ஆழம் காணமுடியாத அழகை எடுத்தியம்புகின்ற கவிஞர். வீ.தங்கராஜ் நம் நினைவைத் தாலாட்டுகிறார்.

'அருவி' ஒவ்வொரு காலாண்டிலும் புதிய. தெளிந்த நீரோட்டமாய்த் துள்ளிவருகிறது; நம் நெஞ்சை அள்ளிச் செல்கிறது.

– பழனி. எழில்மாறன்.



ஹைக்கூ கவிதைகள் என்பது இயற்கையை பாடுவதாக ஜப்பானில் இருந்தாலும் தமிழகத்தில் ஹைக்கூ கவிதைகள் மானுடத்தை, மானுடம் சார்ந்த சமூகத்தைப் பாடுவதாகவே உள்ளன. இந்த அருவி இதழிலும் அவ்வாறே ஹைக்கூ கவிதைகள் காணப்படுகின்றன. "வாழ்வின் அற்புத 'கணங்களை' ஹைக்கூ படம்பிடித்து வருகிறது" என்று எழுத்தாளர் பிரபஞ்சன் ஹைக்கூவைப் பற்றி கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

எழுத்தாளர் சுஜாதா ஹைக்கூவை மொழி பெயர்த்துத் தந்தவர் என்பதுடன் ஹைக்கூவையும் ஹைக்கூவாளர்களையும் வளர்த்து எடுத்தவரும் ஆவார். அவரின் ஒரு சிறு கட்டுரை பழையதாயினும் ஹைக்கூ பற்றிய ஓர் அறிமுகமாக உள்ளது.

ஹைக்கூ பற்றி அதிகம் பேசாதவர் கவிஞர் தமிழ்நாடன். ஆனால், ஹைக்கூ என்றால் என்ன என்று விளக்கி கவிதைக்கும் ஹைக்கூவிற்கும் உள்ள வித்தியாசத்தையும் தெரிவித்துள்ளார். ஹைக்கூ எவ்வாறு இருக்க வேண்டும் என்பது அவரின் தீர்மானமாக உள்ளது.

'ஜப்பானிய மொழியில் முன்னோடிக் கவிஞர்களாகி ஹைக்கூ சாதனை புரிந்த பாஷோ, பூசன், இசா, ஷிகி ஆகிய நால்வருடைய கவிதைகள் மட்டுமே முழுமையாகவும், சரியாகவும், மொழி பெயர்க்கப்பட்டால் தமிழ் ஹைக்கூ உலகம் பயன்பெறும்' என்று ஹைக்கூவின் வளர்ச்சியில் முக்கியப் பங்காற்றிய கவிஞர் ஈரோடு தமிழன்பன் தமிழ் ஹைக்கூ உலகிற்கு ஓர் ஆலோசனை

வழங்கியுள்ளார். இந்த இதழிலும் ஹைக்கூவின் முதல்வன் பாஷோவின் ஹைக்கூ ஒன்றும் மொழி பெயர்க்கப்பட்டு தரப்பட்டுள்ளனது. **அழகாய் ஒரு முகம்/தென்படவில்லை/நிலா பார்க்கும் குழுவில்** ஜப்பான் ஹைக்கூ தவிர சில இந்திய மொழிகளின் ஹைக்கூக்களையும் தந்து ஹைக்கூவிற்கு உலகம் எங்கும் வரவேற்பு உள்ளதை, உறுதி செய்துள்ளது.

ஹைக்கூத் தொகுப்புகளில் முதல் தொகுப்பு 'புள்ளிப் பூக்கள்'. கவிஞர் அறிவுமதி தன்னுடையதே முதல் தொகுப்பு என்று கூறினாலும் கால வரிசைப்படி புள்ளிப் பூக்களே உள்ளது. இத்தொகுப்பின் ஆசிரியர் அமுதபாரதி. இவரின் ஹைக்கூக்களே முதலில் இடம் பெற்றுள்ளன.

**குடை பிடித்தபடி/கோயிலுக்கு செல்கிறார்கள்/ நனைகிறது கோபுரம்** வாசகரையும் நனையச் செய்துவிடுகிறது ஹைக்கூ. கண்டு ரசித்த அனுபவத்தை ஹைக்கூவாக்கி வாசிப்பவருக்குள்ளும் அனுபவத்தை ஏற்படுத்தியுள்ளார். பின்னட்டையிலும் இவரின் ஹைக்கூவையே தரிசிக்க முடிகிறது. முன்னட்டையில் கவிஞர் காவனூர்.ந.சீனிவாசனின் ஹைக்கூக்கள் வரவேற்கின்றன.

**கவலையில்லை/ஆழங்களைப் பற்றி/நீரில் மிதக்கும் பூ.** ஆழமான ஓர் ஹைக்கூ ஆகும். ஹைக்கூவில் சாதனைப் படைத்த, சுவடு பதித்த பெரும் கவிஞர்களின் ஹைக்கூக்களும் அருவியில் பங்கேற்றுள்ளது. பல ஹைக்கூக்கள் சிறப்பாகவும், எடுத்துக்காட்டுக்குரியதாகவும் உள்ளன.

'அருவி' ஹைக்கூக்களை வெளியிட்டு ஆதரவு அளித்து ஹைக்கூவாளர்களுக்கும் ஒரு பாலமாக விளங்குகிறது. ஹைக்கூவாளர்களிடம் இருந்து ஹைக்கூக்களை சேகரித்து தேர்வித்து ஒரு சிறப்பிதழாகத் தந்துள்ள காவனூர் சீனிவாசனின் முயற்சி பாராட்டுக்குரியது. வடிவமைப்பிலும் சிறப்பாக உள்ளது. ஹைக்கூ எழுதவரும் புதியவர்களுக்கு ஓர் அடிச்சுவடியாக விளங்கும் இது ஆய்வாளர்களுக்கும் பயன்படும்.

*- பொன்.குமார், சேலம்.*

 எழுதாமல் விட்டதை வந்து எழுதிக்கொடு என்ற தலையங்க வரிகளைத் தாங்கிய அருவி (இதழ் எண்.20) வந்து பாதம் நனைத்தது.

**இடையிடையே / காணாமல் போகிறது / என் நிழல்** என்ற தங்களின் குறுங்கவிதை வரிகளில் நானும் காணாமல் போனேன். காணாமல் போகிறது என்ற வார்த்தையின் கனம், என் நிழல் என்ற சொல்லாக்கத்தில் மிகுந்த பாரம் ஏற்றிக் கொள்கிறது. என் நிழல் எனும்போது அது தன்னையே மனிதத்திலிருந்து தொலையச் செய்துவிட்ட நிலையாமையைத்தான் காட்டுகிறது. மனிதன் தொலைந்து போகக் கூடியவனா? அவனை காணாமல் செய்துவிட முடியுமா என்ன? காணாமல் போவது என்பது மாயத்தன்மைதானே? அது நிசமல்லவே! மாயம் பூண்டாய் மௌனமானாய் காணாமல் போகும் சூத்திரம் கற்றால் என்ற பாடல் வரிகள் தான் மேற்கண்ட கவிதையைப் படிக்கும்போது எனது நினைவில் எழுகிறது.

**கற்பாறைகள் / காலமெல்லாம் சிரிக்கின்றன / சிற்பங்களாய்** ஆலந்தூராரின் இக்கவிதைவரிகள் செதுக்கிய சிற்பங்களாக மனதில் நின்றன. கல் என்ன செய்யும் அஃறிணை என்று சொல்பவர்களுக்கு சிற்பி செய்து காட்டிய எதிர்வினையிது. சிற்பங்களை சிரிக்க வைக்கலாம். அழச்செய்யலாம். ஏன் அபிநயம் பிடித்து ஆடவும் வைக்கலாம். அருமையான சிந்தனைகளை எழச்செய்யும் அற்புதக் கவிதையிது.

**குளக்கரைத் தனிமை/நிலவின் பிம்பம் / மனதில் வெறுமை** சென்னிமலையாரின் முதலில் வைக்க வேண்டிய முத்தான கவிதை கடைசி வரியான மனதில் வெறுமை தனிமையும், நிலவின் பிம்பமும் மனதில் வெறுமையை ஏற்படுத்துகிறது. இக்கவிதை வாழ்வின் அத்துணை உற்சாகங்களையும் இழந்துபோன ஓர்மனம், தனிமையைத் தேடுகின்றது.

முனைவர் க.இந்திரஜித் அய்யாவின், **ஒன்றுமில்லை தான் / ஆனால் அதிலிருந்துதான் / ஒவ்வொன்றாக** பலத்த கைத்தட்டலுடன் இந்த கவிதையை நாம் பாராட்டியே ஆக வேண்டும். இந்த ஒன்றுமில்லையில் தான் எல்லாமேயிருக்கிறது. ஆன்மீகத்தில் இதைத்தான் அத்வைதம் என்று சொல்வார்கள். ஒன்று இல்லாததைப் போலத்தானிருக்கும். ஆனால் அதில் தான் எல்லாமும் இருக்கும். ஒன்றுமில்லாததிலிருந்துதான் ஒவ்வொன்றாக பிறக்கும்.

**தளும்பித் தளும்பிக் / கரையேறும் நினைவுகள் / நுரைப்பவை நீ** என்ற மு.முருகேசனின் கவிதை மனதை இரம்மியப்படுத்துகிறது. **நுரைப் பூவையள்ளி தலைசூடும் நேரம்** என்று முத்துலிங்கம் எழுதியிருப்பார். நுரைப்பவை என்பது புதியச் சொல்லாக்கம். **சாணம் மெழுகிய வீடு / தரைமுழுக்க / அம்மாவின் விரல்கள்** இது நல்ல கவிதைகளில் ஒன்று. அம்மாவைப் பற்றிய எத்தனை கவிதைகள் எழுதப்பட்டாலும் அது வெற்று வார்த்தைகளாயில்லாமல் உணர்வில் தோய்த்து குருதியில் தொட்டு எழுதப்பட்ட கவிதைகளாகவே காண்கிறேன். இக்கவிதையின் வரிகளை அசாத்தியமானதாகவே என்ன வைக்கிறது. நாணற்காடன் பாராட்டுக்குரியவர். **அறுவடைக்குப்பின்னும் / மீதி நிற்கிறது / கடனுக்கான வட்டி** வெற்றிப்பேரொளியின் இக்கவிதை நேரடிச் சொல்லில் மனதை கனக்கச் செய்கிறது. **வானில் நிலா / ஆற்றுப்படகில் தூங்குகிறது / இருள்.** அருமையான வர்ணனை. மனதை இலேசாக்கும் கவிப்பொருள். இருள், தூங்குகிறது.. என்ற பதங்கள் கவிதையை அழகுப்படுத்துகிறது. அமீர்ஜானுக்கு நிலா பிடிக்கும் நிலாவைப் பற்றி பல கவிதைகள் எழுதியுள்ளார். கவியடுக்கின் கச்சிதம் காரணமாக இந்த நிலா அருமையாக ஒளி வீசுகிறது.

பறவையின் பக்கம் / பறந்து கொண்டிருந்து / உதிர்ந்த இறகு. பொன்.குமாரின் இந்த கவிதைச் சொல்வதென்ன வாழ்வின் நிலையாமையினைத் தானே? ஏன் உதிர்ந்தஇறகு வேறெங்கும் பறக்கக்கூடாதா பறவையின் பக்கமாகத்தான் பறக்க வேண்டுமா..? ஒற்றை இறகும் பறக்கும்; பறவையும் பறக்கும். ஒன்று உயரிணை மற்றொன்று அஃறிணை. மனிதத்திலிருந்து மாறி பேயுரு வாங்கிய காரைக்கால் அம்மைக்கு தெரியும் இந்த உதிர்ந்த இறகின் தத்துவம்.

பிள்ளை இல்லாத வீடு / குவிந்த கிடந்தது / விளையாட்டுப் பொம்மைகள் கொள்ளிடம் காமராஜின் இந்த கவிதையைப் படிக்கும்போதே மனிதில் ஒருவித சோகம் பற்றிக்கொள்கிறது.

இப்படியான புதுப்புனல்களோடு அருவி புத்தெழுச்சியுடன் கொட்டுகிறது. இஃது இலக்கியத் தாகங்களுக்கு கிடைத்த அற்புத நீருணி.

- சூரியநிலா, சேலம்.



● ஆதவன் உதயமாகிவிட்டது
புறாக்கள் விடைபெறுகின்றன
இரைதேட கூடுகளிலிருந்து.
காலை நகரம்
பரபரப்பாகிக் கொண்டிருக்கிறது
நான்
மெல்ல விழிக்கிறேன்.
அலைபேசியில் தவறிய அழைப்புகள்
நூறைத் தாண்டிவிட்டது.

● நான்
அவளது அடுத்த அழைப்பிற்குள்
அவளுக்கெனப்
பொய்யைத்தேடவேண்டும் இனி.

**ஆசிரியர் :**
**சக்தி**
**90929 25789**

**வெளியீடு :**

*அகநி,*
*30, பாடசாலை வீதி,*
*அம்மையப்பட்டு,*
*வந்தவாசி - 604 408.*

**பக்கங்கள் : 64**
**விலை : ரூ. 30/-**

சங்க காலம் தொடங்கி, சமகாலம் வரையில் காதலைக் கவிதைகளால் கொண்டாடிவரும் கவிஞர்களில் தனித்த அடையாளத்துடன் இத்தொகுப்பின்வழி நம்முன் வருகிறார் கவிஞர் சக்தி. காதலை வெறும் வார்த்தைகளில் வழியவிடாமல், தன் வாழ்வின் உயிர்க்குரலாய் பதிவு செய்துள்ளார்.

கவிதைவாசம் மனசைத் தொடுகிறது.

– மு.முருகேஷ்.

## நூல் அறிமுகம்




ஆசிரியர் :
**நாஞ்சில். பி.சி.அன்பழகன்**
**97102 77929, 95662 43672**

வெளியீடு :

கண்மணி பதிப்பகம்,
A16 ரேடியல் டைப்ஹவுஸ்,
திருநகர், ஜாபர்கான்பேட்டை,
சென்னை - 600 083.

பக்கங்கள் : 272
விலை : ரூ. 200/-

இப்போது இவர் எழுதியிருக்கிற 'மனிதப்பிழை' என்ற நூல் இவரது நான்காவது நூல். நாட்டில் எத்தனையோ பிழைகள் மலிந்திருக்கின்றன. எல்லாப் பிழைக்கும் மூலப்பிழை மனிதப் பிழைதான். அந்தப்பிழைகளைப் பற்றிப் பல்வேறு கட்டுரைகள் அடங்கிய தொகுப்புதான் இந்நூல். இது கதம்பப் பூக்களின் தொகுப்பல்ல; கந்தக வெடிகளின் அணிவகுப்பு. இது உவமைகளின் சித்தரிப்பு அல்ல; உணர்ச்சிகளின் கொந்தளிப்பு.

'அணைகள் வலைவீசினாலும், வாழ்க்கை நதி தப்பித்து ஓடிக்கொண்டுதான் இருக்கிறது'.

'கண்ணீர் நதிகள் கலப்பதால்தான் இந்துமகா சமுத்திரத்தின் நீர்மட்டம் உயர்ந்து கொண்டுபோகிறது' போன்ற கவித்துவமுள்ள வரிகள் இவர் கட்டுரையில் சொல்லாட்சி புரிகிறது. நாஞ்சில். பி.சி.அன்பழகன் நாடறிந்த இயக்குநர், சிறந்த கதாசிரியர், சிறந்த உரையாடல் ஆசிரியர், தேர்ந்த எழுத்தாளர், பேச்சாளர், இலக்கியவாதி என்ற பன்முக ஆற்றல் பெற்ற பண்பாளர்.

இவரது உரைநடை வித்தியாசமான தனிநடையாக இருக்கிறது.

– கவிஞர்.முத்துலிங்கம்.

## நூல் அறிமுகம்



ஆசிரியர் : ஆரிசன்
94423 11118

வெளியீடு :

*தளிர் பதிப்பகம்,*
*2/2, தீபம் வளாகம்,*
*முதன்மைச் சாலை,*
*சாத்தூர் - 626 203.*

பக்கங்கள் : *112*
விலை : *ரூ. 100/-*

- தோல்விக் கரையில்
பழுத்தே கிடக்கிறது
வெற்றிக்கனி.

இறக்கைகளை அசைக்க அசைக்க
அருகில் வருகிறது
வானம்.

புத்தகக் கண்காட்சி
பட்டாம்பூச்சியாய்ப் பறக்கிறது
மனசு.

மதம்
பத்தும் செய்யுமா
பணம்.

சமாதானம் பேச
அழைத்தனர்
துப்பாக்கி முனையில்

நடைவண்டிப் பயணம்
இசை சேர்க்கிறது
குழந்தையின் கொலுசு.

ஆரிசன் படைத்துக்காட்டும் ஹைக்கூ உலகம் பரந்தது, விரிந்தது, கூடவே ஆழ்ந்தது, அகன்றது, நுண்ணியது; அது உலக மயம் பற்றியும் பாடும்; உள்ளூர் நிலைமையையும் அலசும் அது இன்றைய அறிவியல் தொழில்நுட்பத்தையும் பாடுபொருள் ஆக்கும். முன்னைய இலக்கியத் தொடர்களையும் சொற்களையும் கையாண்டு ஆற்றலோடு தனது கருத்தினைப் புலப்படுத்தவும் செய்யும். அது இயற்கையின் எழிலைப் படம் பிடிக்கவும் செய்யும். சமூக அவலங்களுக்கு எதிராக அழுத்தமாகக் குரல் கொடுக்கவும் முனையும்.

– முனைவர். இரா.மோகன்,
மதுரை.

## நூல் அறிமுகம்




ஆசிரியர் :
கூ.ரா.அம்மாசையப்பன்
97900 01558

வெளியீடு :
ஓவியா பதிப்பகம்,
17-16-5A K.K.நகர்,
வத்தலக்குண்டு - 642 202.
அலைபேசி : 76675 57114

பக்கங்கள் : 96
விலை : ரூ. 70/-

● மயிலிறகு
மரப்பாச்சி பொம்மை
கோலிக்குண்டு
சடுகுடு ஆட்டம்
சாட்டை பம்பரம்
மொட்டைமாடியில் ஆடிய
கட்டைபந்து
ஒன்றாகத்தானே
விளையாடினோம்
நேற்றுவரை...
பூப்போட்ட
தாவணியை
புதிதாகப்போட்டதாலே
என்னோடு
வரமறுக்கிறாயே...
ஏன்?

கவிதைக்கு வெளியே உள்ள பொருட்கள் கவிதைக்குள் காலடி எடுத்து வைத்ததுமே குறியீடாக மாறிவிடுவதைத் தவிர்க்க முடியாது என கவிதை குறித்து ஜெயமோகன் சொல்லியிருப்பார்.

'இன்றைய கவிஞனுக்கு மிகப்பெரிய சவால் இது' என்று. இன்னமும் பெரும்பாலான கவிஞர்கள் யதார்த்தவாத கவிதைகளின் குறியீடுகளை விலக்கிவைத்தே பார்க்கிறார்கள். அவர்களிடம் கவிதை குறித்தான தெளிந்த புரிதல் இருக்கிறது. யாருக்கானது இது என்கிற புரிதலாய். அப்படிப்பட்ட புரிதலோடு வெளிக்கிளம்பியிருக்கிறார் சேலம். கூ.ரா.அம்மாசையப்பன்.

மெல்லிய மயிலிறகால் வருடி விடுகிற மென்மை இவரது கவிவரிகளில் தோய்ந்து கிடக்கிறது.

– வதிலை. பிரபா.



ஆசிரியர் :
பேராசிரியர். வெ.சாக்கன்
97895 89323

வெளியீடு :

புதுஎழுத்து,
2/205, அண்ணா நகர்,
காவேரிப்பட்டிணம் - 635 112.
கிருஷ்ணகிரி.

பக்கங்கள் : 112
விலை : ரூ. 80/-

கடற்கரை மணலெடுத்து
கவிதை வரிகளை
அடுக்கி வைக்கிறேன்.

காற்றும் கடலலையும்
வந்துவந்து
பிடித்துச் செல்கின்றன.

மோகித்த அலையொன்று
இழுத்துச் சென்றது
முழுக்கவிதையையும்.

கால்கடுக்க
அலைந்துவந்து
காத்துக்கிடக்கிறேன்

எங்கேனும்
கரையொதுங்கியிருக்குமா
என் கவிதாங்கிய
மணல் முத்துக்கள்...

மண்ணுக்குள்ளிருந்து விதையானது மேலே வருவதற்கு எப்படி முயற்சி செய்கிறதோ அதுபோல விஞ்ஞானம் வளர்ச்சி அடைந்துள்ள இக்காலத்தின் சூழலுக்கேற்ப, கவிஞர். வெ. சாக்கன் எழுதிய கவிதைகள் சமூகப் பன்முகத்தன்மையுடன் வெளிவந்திருக்கின்றன. இவரது வாசிப்பு பல்நுணுக்கங்களைப் புரிந்து படைத்திருப்பது அவரது நுண்மான் பார்வையை வெளிப்படுத்துகின்றது. சமூகப் பொறுப்புள்ள கவிஞனாக காத்திரமான கவிதைத் தொகுப்பு வழங்கி இருப்பது வரவேற்கத்தக்கது.

– முனைவர். சி.எம்.வர்கீஸ், ச.ச.,
தூய நெஞ்சக்கல்லூரி, திருப்பத்தூர்.



● அதிகப்பூக்கள்
உடல் இழந்து
பெறுகின்றன மரியாதை.

அடுத்தவன் கைப்படாத
பூக்களுக்குக்
கிடைப்பதில்லை மரியாதை

என்ன கௌரவம் கொடுக்கிறது
இந்தச்சூரியன்
இந்த நிலவு
இந்த உலகம்
பேசிப் பேசியே
எழுதிவைத்துச் சாகும் பூக்கள்.

எறும்புகளுக்கு
தேனைக்கொடுத்து
பூக்களாகவே இருந்து
தொலைத்த செடியின் மனதில்
துடிக்கின்றன
இரைச்சலின் வலிகள்.

**ஆசிரியர் :**
**வாலிதாசன்,**
**98948 87705**

**வெளியீடு :**

***வனிதா பதிப்பகம்,***
***11, நானா தெரு,***
***பாண்டி பஜார், தி.நகர்,***
***சென்னை - 600 017.***

**பக்கங்கள் :** ***104***
**விலை :** ***ரூ. 70/-***

மண் சார்ந்தும், மக்கள் சார்ந்தும் பற்றிப்படர்கின்ற வாலிதாசனோடு கவிதை ஒரு நேய உணர்வை வெளிப்படுத்துவதை இந்நூலில் நான் காணமுடிகிறது.

எதார்த்தமான மக்களிடையே காணலாகும் வாழ்வினை இளகிய நொடிகளைக் கசிந்து உருகும் காட்சிகளை, ஏமாற்றங்களை, ஏக்கங்களைக் கலைநயம் அளவாய்க் கொண்ட ஆவணப்படங்கள் போல நமக்கு நூல் நெடுகக்காட்டிக் கொண்டே செல்கிறார்.

**- ஈரோடு. தமிழன்பன்.**

## காவனூர் ந. சீனிவாசன்

### கவிதைகள்

- எதுவேண்டுமானாலும்
தோன்றலாம்.

இதில்
வடிவங்களோ
குறியீடுகளோ
கோடுகளோ
கிறுக்கலோ
எப்படியோ இட்டு
நீங்கள்
நிரப்பிக்கொள்ளுங்கள்.

வெறுமை நிறைந்த
வெற்றுக் காகிதத்தை
நான்காகவும்
மடிக்கலாம்
கசக்கியெறியவும்
செய்யலாம்
அல்லது
பத்திரப்படுத்தியும்
வைக்கலாம்.

கவனிக்காமல்
விட்டுவிட்டால்
அது
காற்றிலும்
பறக்கத் தொடங்கலாம்
இறக்கை
முளைக்காமலேயே.

ஆனால்
அதைக் கொஞ்சம்
ரசிக்க வேண்டுமெனில்
காத்திருவேண்டும்
மனசு.

● நதியைத் தொட்ட
தூரிகை
கடல்வரையத்
துவங்குகையில்
தூரத்துமலை
ரசித்துக்கொண்டிருந்தது
என்னை.

பெருவெளியை
வரைந்து முடிப்பதற்குள்
அவசரப்பட்டு
குறுக்கே வருகிற
நிலவை
என்னால்
தடுக்கமுடியவில்லை.

நீல வண்ணத்திற்குள்
தூரிகையைத்
தோய்த்தெடுக்கும் முன்பே
ஆர்ப்பரித்து
எழுகிற
அலைகளின் சப்தம்
இப்போது
மிகத்துல்லியமாய்
கேட்கத் தொடங்குகிறது
எனக்கு மட்டும்.

வரைந்து முடித்து
கால் நனைத்து
திரும்பிப்பார்க்கிறேன்
கடல்நீரில்
மிதக்கிறது
இன்னொரு நிலா
என்னை
வரைந்தபடி...

ஆசிரியர்.
காவனூர். ந.சீனிவாசன்

கைபேசி : 9600898806
aruvisrinivasan@gmail.com

'ARUVI' - Tamil Magazine Private Circulation Only TASNA Reg. No.: 304/14/02

# கவிதை துளித்துளி

- மழைக்கு ஒதுங்கிய
குட்டிநாயை
விரட்டுவதுபற்றி
யோசிப்பதற்குள்
அதற்கு
பெயர்வைத்துவிட்டாள்
என்குழந்தை.
- ப்ராங்ளின் குமார்.

- ஒரு பம்பர
கயிற்றின் முனையை
எச்சில் நனைத்து
சாட்டை சுழற்றுகையில்
அதன் ஆணியின்
கூர்முனை
எழுதத்தொடங்குகிறது
பால்யத்தின்
வாழ்க்கையை.
- தாய்சுரேஷ்.

- கோவிலில்
பலிகொடுக்கப்பட்ட
ஆடு
இறுதியாய்
தேடி இருக்கலாம்
கடவுளை.
- ஏ.எம்.முபாரக்.

Editor : Kavanur Na. SRINIVASAN
Published : Smt. N. Buvaneswari Srinivasan,
Laser Typesetting : D. Kotteswaran, GUGAN PRINTERS, Kanchipuram.
For all Contacts : 14, Nehru Bazaar, THIMIRI - 632 512. Vellore Dist.